உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.




| தொகுதி | சித்திரபானுஹு தைமீ ௧௳ | பகுதி |
|---|---|---|
| 28 | 1943ஹு ஜனவரிமீ 14௳ | 7 |


## கடவுள் வணக்கம்.

மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவிய சேவடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல் இலங்கை கட்டழித்த
சேவகன் சீர்கேளாத செவியென்ன செவியோ!
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியோ! (1)

பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியும் கையும் கனிவாயும் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே!
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே! (2)

மடந்தாழு(ம்) நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றத்
தொடர்ந்து ஆரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை போற்றாத நாவென்ன நாவே!
நாராயணா என்னா நாவென்ன நாவே! (3)




## நெருக்கடியிலும் சங்கீத வாதமா?

ரோம் தீப்பற்றி எரியும்போது நீரோ பிடில் வாசித்துக்கொண்டிருந்தான்" என்று சொல்வதுண்டு. இன்று நம் நாட்டில் உள்ள பிரமுகர்கள் சிலர் செய்யும் காரியங்களைப் பார்த்தால், அவர்கள் ரோமாபுரி மன்னன் நீரோவையும் விட ஒரு படி மேலே போய் விட்டார்கள் என்றே சொல்லத் தோன்றுகிறது.

இன்று நம் நாடு இருக்கும் நிலை என்ன? மக்கள் படும் அவதி என்ன? நம் நாட்டை யுத்த அபாயம் சூழ்ந்திருக்கிறது. கல்கத்தா நகர் மீது எதிரியின் விமானங்கள் வெடிகுண்டு பொழிந்த வண்ணமாயிருக்கின்றன. அடுத்தபடி, ஜப்பான் அரக்கனின் கோர கிருத்தியம் எந்த இடத்தில், எந்த நிமிஷத்தில் நேருமோ! என்று நாட்டு மக்களெல்லாம் நடுநடுங்கிக் கொண்டிருக்கின்றனர். போதாக் குறைக்கு உள் நாட்டு அரசியல் நெருக்கடி வேறு, யுத்த நெருக்கடியுடன் சேர்ந்து நாட்டை அமர்க்களப் படுத்தி வருகிறது. இவ்வித யுத்த நெருக்கடியும் அரசியல் நெருக்கடியும் சேர்ந்து நாட்டு மக்களின் அன்றாட வாழ்வையே அந்தரத்துக்குக் கொண்டுவந்து விட்டது. இதன் பயனாக, மக்களுக்கு உண்ண உணவும் உடுக்க உடையும் போதிய படி கிடைப்பது அருமையாகி விட்டது.

இங்ஙனம், நாட்டு மக்கள் உயிருக்கே மன்றாடக்கூடிய நிலையில், உயிர் வாழ்க்கையை ஓரளவேனும் ஒழுங்காக நடத்த முடியாது திண்டாடிக் கொண்டிருக்கும் நிலையில், சென்னைமா நகரிலுள்ள சில செல்வப் பிரமுகர்கள் சங்கீதம் பற்றி வாதப் பிரதிவாதங்கள் நடத்தி வருகிறார்கள் என்றால், அதை என்னென்பது! இவ்வகையில், இவர்கள் நீரோ மன்னனைக் கூடத் தோற்கடித்து விட்டார்கள் என்றால், அது மிகைப்படுத்திக் கூறுவதாகாது. நீரோ தனக்கு வாய்த்த மிதமிஞ்சிய ராஜபோகத்தில்

ஆழ்ந்திருந்ததால், தனது தலைநகர் நெருப்புப் பற்றி எரிவதை யறிந்துங்கூட லட்சியஞ் செய்யாது, பிடில் வாசித்து இசையில் மயங்கி யிருந்தான். நம் சென்னைப் பிரமுகர்களும் செல்வமும் செல்வாக்கும் வாய்ந்தவர்க ளாதலால், தாங்கள் அனுபவித்து வரும் குறைவற்ற சுகபோகங்களில் நாட்டுக்கு நேர்ந்திருக்கும் அபாயத்தையும் மக்கள் அனுபவித்துவரும் கஷ்ட நஷ்டங்களை யும் லட்சியஞ் செய்யாது, சங்கீத வாதத்தில் மும்மரமாக இறங்கி யிருக்கிறார்கள். உலகத்தின் முன் உள்ள முக்கிய பிரச்னைகளை விட, நாட்டின் முன் நிற்கும் தேசியப் பிரச்னையைவிட, இச் சங் கீதப் பிரச்னை அப் பிரமுகர்களுக்கு மிக முக்கியமாய்ப் போய் விட்டது. ஆகவே, அவர்கள் இச் சங்கீதப் பிரச்னையை வியாஜ மாக வைத்துக்கொண்டு துவந்த யுத்தஞ் செய்து வருகிறார்கள்.

* * * *

இரண்டாவது உலக மகாயுத்தம் தொடங்கி மூன்று வருஷங் கள் முடிந்து நான்காவது வருஷம் நடக்கிறது. இச் சங்கீத யுத்தம் தொடங்கியோ ஏறக்குறைய இரண்டாண்டுகள் ஆகின்றன. மகா யுத்தம் மூன்றாவது வருஷத்திலாயினும் முடிந்துவிடும் என்று எதிர் பார்க்கப்பட்டது. ஆனால் முடிவுறாது நீடித்துக்கொண்டே போகிறது. சங்கீத யுத்தமோ சென்ற வருஷமே ஒருவாறு முடிந்து விட்டதாகக் கருதப்பட்டது. ஆனால், இடை யிடையே சிறு சிறு சலசலப்பு செய்து, இந்த கிறிஸ்துமஸ் வாரத்தில் இது துவஜம் தூக்கி ஆரம்பித்திருக்கிறது. கர்நாடக சங்கீதத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவதாகப் புறப்பட் டிருப்பவர்களில் முக்கியமாக சங்கீத வித்வத் சபை மியூஸிக் அகாடமியைச் சேர்ந்த ஸ்ரீ கே. வி. கிருஷ்ண ஸ்வாமி ஐயர் போன்றவர்களும், சங்கீத உலகி லிருந்து 'ரிடைய'ராகி யிருக்கும் ஸ்ரீ முசிரி. சுப்பிர மணிய ஐயர் போன்ற சில சங்கீத வித்வான்களும் குறிப்பிடத் தக்கவர்களாவர். இவர்களுடைய கிளர்ச்சிக்குச் சங்கீத ரஸிகர்க ளிடையிலோ சங்கீத வித்வான்க ளிடையிலோ சிறிதும் ஆதரவு கிடையாது. ஆனால், ஸ்ரீ. கே. வி. கிருஷ்ணசாமி ஐயர் போன் றார் தங்கள் பண பலத்தாலும், சென்னை சர்வ கலாசாலை முதலிய வைகளில் வகிக்கும் பதவியின் செல்வாக்காலும் தமிழ் இசை இயக்கத்துக்கு எதிர் பிரசாரஞ் செய்து நசுக்க முயன்று வருகி றார்கள். சென்ற ஆண்டெல்லாம் அவர்கள் தங்கள் நோக்கத்தை நிறைவேற்ற செய்யாத சூழ்ச்சியில்லை. கையாளாத பிரசார முறையில்லை. ஆனால், அவர்களது ஜம்பம் சங்கீத ரஸிகர்களிடை யிலும் சங்கீத வித்வான்க ளிடையிலும் செல்லவில்லை. ஆயினும், அவர்கள் தங்களின் எதிர் பிரசாரத்தை விடாது சமயம் நேர்ந்த போதெல்லாம் யாரைக் கொண்டாயினும் நடத்தி விஷத்தைக் கக்கச் செய்து, திருப்தியடைந்து வந்தனர்.

இந் நிலையில் கிறிஸ்துமஸ் வாரத்தில் சங்கீத வித்வத் சபை மகாநாடு என்று ஒரு சிறு வியாஜம் கிடைக்கவே, தமிழிசை இயக்கத்தை எதிர்ப்பதற்கு அதைப் பயன்படுத்திக் கொள்ள அவர்கள் முனைந்துவிட்டனர். இவ்வருஷம் இக் கோஷ்டியாருக்குக் கைக் கருவியாக அகப்பட்டவர் மாஜி நீதிபதி ஸர். வெங்கடசுப்ப ராவ். இவர் சமூக சீர்திருத்த விஷயத்தில் பேரார்வமுடையவர். விதவைகள் துயரை நீக்குவதற்கு அவர் வெகுவாகப் பாடுபட்டு வருகிறார். அநாதைப் பெண்களுக்கும் பிறவழுக்கி விழுந்த மங்கையர்களுக்கும் கல்வியும் ஆதரவும் அளிக்க சென்னையில் ஸேவா ஸதனத்தை அவரது மனைவியார் நடத்தி வருகிறார். அப்பேர்ப்பட்ட பரந்த மனோபாவமுடையவர் சங்கீத விஷயத்தில், மொழி விஷயத்தில் மட்டும் குறுகிய நோக்கம் கொண்டிருப்பது நமக்கு ஆச்சரியத்தையே தருகிறது. அவருக்குச் சங்கீத ஞானம் எவ்வளவு தூரம் உண்டென்பது நமக்குத் தெரியாது. ஆனால், அவர் மியூஸிக் அகாடமி நிர்வாகிகளின் தூண்டுதலின்மீது சங்கீதச் சச்சரவில் தலையிட்டு, ஒருதலைபட்சமாகத் தீர்ப்பளித்திருக்கிறார். உயர்தர நீதி மன்றத்தில் நீதிபதியாயிருந்து பல வழக்குகளில் நியாயம் வழங்கி நற்பெயர் எடுத்த இவரது தகுதிக்கு இது ஒரு சிறிதுஞ் சரியல்ல. இது அவரது நற்பெயருக்குப் பெருங் களங்கத்தையே உண்டுபண்ணும். இப்பிரமுகர் சங்கீத வித்வத்சபை மகாநாட்டைத் திறந்து வைக்கையில் கூறியுள்ள மொழிகளைப் பாருங்கள்:—"சங்கீதத்தில் பாஷை பற்றி இப்பொழுது ஏற்பட்டிருக்கும் உணர்ச்சி வருந்தத் தக்கது. இரண்டுவித காரணங்களுக்காக நான் வருந்துகிறேன். முதலாவது தமிழ் தெலுங்கு ஒற்றுமை சம்பந்தப்பட்டது. இரண்டாவது கலை சம்பந்தப்பட்டது. தலைமுறை தத்துவமாக, தியாகராஜர், சியாமா சாஸ்திரி, தீக்ஷிதர் ஆகியோரின் சங்கீதத்தில் தமிழர்கள் பரவச மடைந்திருக்கின்றனர். அப்படியிருக்க, இதில் திடீர் மாறுதல் ஏற்பட்டது ஏன்? என்று எனக்குத் தெரியவில்லை. கலைத்துறையில் அரசியல் கட்சி உணர்ச்சி புகுந்திருப்பது பலமாகக் கண்டிக்கத் தக்கது. தமிழர்களின் சோபை பிரகாசிக்கும் துறைகள் வேறு எத்தனையோ இருக்கின்றன. தேவாரம், பிரபந்தம் ஆகியவற்றில் பரவச மடைந்து ஈடுபடாதவர் எவர்? இப்பேர்ப்பட்ட சங்கீத நிபுணர்களையும் மேதைகளையும் உற்பத்தி செய்த தமிழ்நாட்டில் அந்தத் தமிழர்களே அவர்களைப் புறக்கணிப்பது மிகவும் துக்கப்படக்கூடிய விஷயம்." தமிழர்கள் மீதும், தேவாரம், பிரபந்தம் ஆகியவற்றின் மீதும் ஸர். வெங்கடசுப்ப ராவுக்கு எவ்வளவு பரிவு? சொன்னதைச் சொல்லுமாம் கிளிப்பிள்ளை! அதுபோல, சங்கீத வித்வத் சபை நிர்வாகிகள் சொல்லிக் கொடுத்ததை பாவம்! ஸர்.

வெங்கடசப்ப ராவ் பாடம் ஒப்பித்திருக்கிறார். இல்லா விட்டால், தமிழர்கள் தலைமுறை தத்துவமாக, தியாகராஜ சுவாமிகள், சியாமா சாஸ்திரிகள், தீக்ஷிதர் ஆகியோரின் சங்கீதத்தில் பரவச மடைந்து வந்ததைப்போ, தேவாரம், பிரபந்தம் ஆகியவைகளில் பாரும் பரவச மடையக்கூடிய நிலைமையோ அவர் கண்டாரா? 'சங்கீதத் துறையில் திடீர் மாறுதல் ஏற்பட்டிருப்பது ஏன்?' என்று அவர் கேட்கிறாரே! அதுகூட அவர்கள் சொல்லித்தான் அவருக்குத் தெரிந்திருக்கவேண்டும். ஏனென்றால், அவர் பிரசங்கத்தைத் தொடங்கும் போதே 'சங்கீத ஞானத்தில் தாம் நிரட்சர குட்சி' என்று கூறிக் கொண்டதால், சங்கீத உலகில் நடக்கும் நிகழ்ச்சிகளைப்பற்றி அறிவதற்கு அவருக்குச் சிரத்தையிருக்க நியாயமில்லை. சங்கீத அரங்கத்திலேயே இதுதான் முதல் தடவையாக அவர் அடியெடுத்து வைத்திருக்கிறாரோ என்பது கூட நமக்குச் சந்தேகந்தான். அப்பேர்ப்பட்டவருக்கு, அவர் கூறுவதுபோல், 'சங்கீதத்தில் பாஷைபற்றி இப்பொழுது ஏற்பட்டிருக்கும் உணர்ச்சியைப் பற்றியோ, 'கலைத்துறையில் அரசியல் கட்சி உணர்ச்சி புகுந்திருப்பதை'ப் பற்றியோ, ("தமிழ் நாட்டில் தமிழர்கள் நிறைந்த சபையில் தமிழ்ப் பாடல்களுக்கு முதன்மை ஸ்தான மளிக்கவேண்டும்" என்று கூறும் நியாயமான தமிழ் இசை இயக்கத்துக்கு, அரசியல் கட்சி வேற்றுமை, வகுப்புத் துவேஷம் போன்ற வர்ணத்தைப் பூசித் தங்களுக்குப் பலன் தேடும் 'திருத்தொண்டி'ல் ஈடுபட்டிருக்கும்) சங்கீத வித்வத்சபை நிர்வாகிகளைப் போன்ற பிரமுகர்கள் சொல்லி யல்லது வேறெப்படி தெரிந்திருக்க முடியும்?

* * * *

எப்படியோ, சங்கீத வித்வத் சபை இடையே ஓய்ந்திருந்த சங்கீதச் சண்டையை, ஸர். வெங்கடசப்பராவ் மூலமாக மீண்டும் தொடங்கி விட்டார்கள். இதற்குப் பலமாக எதிர்ப்பு ஏற்பட்டிருப்பதை யறிந்ததும், மற்றொரு பிரமுகரைக் கொண்டு சமாளிக்க முயன்றிருக்கின்றனர். சங்கீத வித்வத் சபை சார்பில் நடந்த சங்கீதப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குப் பட்டமும் பரிசும் வழங்குவதற்காகக் கூட்டப்பட்ட சதஸுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ டி. ஆர். வெங்கடராம சாஸ்திரியார் தமது வாசா கைங்கரியத்தால், கர்நாடக சங்கீதத்தின் கௌரவத்தைக் காப்பதற்கே அவதரித் திருப்பதாகத் தங்களைக் கருதியுள்ள ராகப்பிரதானக் கோஷ்டியாருக்கு உதவி புரிந்திருக்கிறார். "சங்கீதத் துறையிலும் இப்போது சச்சரவும் கிளர்ச்சியும் ஏற்பட்டிருக்கின்றன. சங்கீதத்துக்குப் பாஷை அவசியமா என்பது பற்றி இப்போது பலத்த வாக்குவாதம் ஏற்பட்டுள்ளது.........பாஷை சம்பந்த மிராமலே சங்கீதம் தனியாகவே உணர்ச்சி யளிக்க வல்

லது. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் குழலோசையைக் கேட்டு மரங்களும் பாறைகளும் உணர்ச்சி பொங்கின என்பதாக நாம் படித்திருக்கிறோமல்லவா! தற்சமயம் எல்லாத் துறைகளிலும் அபிவிருத்தி கோருகிறோம். தமிழிலும் ஏராளமான கீர்த்தனைகள் முதலியவை ஏற்படவேண்டுமென்பதில் சந்தேகமே இல்லை. இதற்காகச் சண்டையா போடுவது? இசைவெள்ள இன்பத்தில் கலப்போர் புன்சொல் பேசி வாதம் கிளப்புவது சரியா? தமிழில் அதிகப் பாட்டுகள் ஆக்கவும் பாடவும் வேண்டும். ஆனால் நாம் பராசீனமாகக் கேட்டு, மெய்மறந்துள்ள கீர்த்தனங்களை, அவை எப் பாஷையில் இருப்பினும் உதாசீனப்படுத்தாமல் பாடுவதால் நமது ஞானத்துக்கு அணிகலன்; ஆத்மாவுக்கும் திருப்தி" என்று அவர் தமது கருத்தைக் கூறியிருக்கிறார். இவ்விரு பிரமுகர்களும் புதிதாக ஒன்றும் கூறிவிடவில்லை. சென்ற ஆண்டில் ஸ்ரீ எல். வெங்கடராம ஐயர் போன்ற ராகப் பிரதானக் கோஷ்டியார் என்ன சொன்னார்களோ அதையே தான் இவர்களும் ஒப்பித்திருக்கிறார்கள். 'சங்கீதத்துக்கு ராகந்தான் பிரதானம்; பாஷை பிரதானமில்லை' என்ற இவர்கள் கூற்றுக்கெல்லாம் நாம் முன்னமே பல தடவை ஆணித்தரமாகப் பதிலளித்திருக்கிறோம். ஆகவே, ஸர் வெங்கடசுப்ப ராவ், ஸ்ரீ டி. ஆர். வெங்கடராம சாஸ்திரியார் போன்றவர்கள் முன் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்வதுபோல், நாமும் பழைய பதிலையே மீண்டும் திருப்பிச் சொல்ல விரும்பவில்லை.

ஸர். வெங்கடசுப்ப ராவின் விபரீதப் பேச்சுக்கு ராஜா ஸர். அண்ணாமலை செட்டியார் இந்தியன் பைன் ஆர்ட் சொஸைடி மகாநாட்டுத் திறப்பு விழாவின்போது, சரியான பதிலளித்திருக்கிறார். 'தமிழராகிய நாம் தமிழ்நாட்டில் பெரும்பாலும் நாம் அறிந்த மொழியிலேயே பாட வேண்டுமென்று விரும்புகிறோம். இதில் விவாதத்துக்குச் சிறிதும் இடமில்லை. தமிழ் இசை இயக்கம் ஜாதித் துவேஷம் கொண்டதல்ல. இதர பாஷையினிடத்தில் வெறுப்பு உடையதல்ல. மற்ற எவ்விதமான சந்தேகமும் விபரீத அர்த்தமும் ஏற்படக் கூடியது மல்ல. தமிழ் இசை இயக்கம் ஏற்பட்ட காலம் முதல் பற்பல இடங்களில் இவ் வுண்மை தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது" என்று கூறிய ராஜா ஸர். அண்ணாமலை, "நாம் கேட்கும் சங்கீதம் உயர்வானதாக இருக்கவேண்டும். இன்பந் தரத் தக்கதாக இருக்கவேண்டும். விளங்கும் மொழியில் அமையவேண்டும்" என்று இசை சம்பந்தமாகத் தமிழரது கோரிக்கையை அழகாகவும் சுருக்கமாகவும் கூறி முடித்திருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது. மேலும், அவர், 'தமிழ் இசை இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் பாடகர், பாடகிகளை அவர்களின் விருப்பத்துக்கு மாறாக,

தமிழ்ப்பாடல்களையே பாட வேண்டுமென்று வற்புறுத்துவ'தாக, ராகப் பிரதானக் கோஷ்டியார் கூறி வரும் அபவாதத்துக்கும், "தமிழ் நாட்டில் சங்கீத வித்வான்களாக விளங்குபவர்களில் பெரும்பான்மையோர் தமிழைத்தான் தாய் மொழியாகக் கொண்டவர்கள். அவர்களில் ஒரு சிலரைத் தவிர, பெரும்பான்மையோருக்குப் பொதுமக்கள் விரும்பும் தமிழ்மொழியில் பாடுவதற்குத் தான் விருப்பமிருக்கும்" என்று தக்க பதிலளித்து, "ஆனால் சங்கீத சபைகளின் நிகழ்ச்சி முறையை நோக்கினால், தாய்மொழி யல்லாத பிற மொழிப் பாடல்களையே பாட வேண்டுமென்று பாடகர் பாடகிகள் வற்புறுத்தப்படுகிறார்கள் என்பது சொல்லாமலே விளங்கும்" என்றும் கூறிச் சில சங்கீத சபைகள் செய்யும் அநியாயங்களை எடுத்துக் காட்டியிருக்கிறார்.

* * * *

இதைவிட, ஸர். வெங்கடசுப்பாராவ், ஸ்ரீ டி. ஆர். வெங்கடராம சாஸ்திரியார், இவர்கள் போன்ற பிரமுகர்களது ஆதரவில் தங்கள் கட்சியை நிலைநிறுத்த முயன்று வரும் ராகப் பிரதான கோஷ்டியாருக்கு, சங்கீத வித்வத் சபை மகாநாட்டில் தலைமை வகித்த மழவராயனேந்தல் ஸ்ரீ சுப்பராம பாகவதரின் தலைமைப் பேருரை யொன்றே சரியான பதிலாக இருக்கிறது. 'சங்கீதத்துக்கு இசைந்த கீர்த்தனங்கள் தமிழ் மொழியில் அவ்வளவாக இல்லை, என்று தமிழிசை விரோதிகள் மனமாரப் பொய் கூறி வந்தார்களல்லவா! "தமிழ் நாட்டின் தாய் மொழியாகிய அமிழ்தினும் இனிய தமிழ் மொழியில் நம் முன்னோர்கள் பக்தி பாவசத்தோடு ஆயிரக் கணக்கான பண்களும் கீர்த்தனைகளும் பதங்களும் தேனொழுகப் பாடியிருக்கிறார்கள். அவற்றில் தெலுங்கு முதலான பாஷைகளிலுள்ள பெரியவர்களின் கீர்த்தனங்களைப் போலவே அந்தந்தச் சந்தர்ப்பங்களுக்கு உகந்தவாறு, ராகம், பாவம், தாளம் ஆகிய சிறந்த அம்சங்கள் விசேஷமாய்ப் பொருந்தியிருப்பதைக் காணலாம். ஆகையால் தமிழ்ப் பெரியார்களின் கீர்த்தனங்களையும் சங்கீத வித்வான்கள் கையாள வேண்டும்" என்று கூறி அவர் உண்மையை எடுத்துக் காட்டியிருப்பதற்கு என்ன பதில் சொல்லப் போகிறார்கள்? என்று நாம் கேட்கிறோம். ஸ்ரீ சுப்பராம பாகவதரை, சாதாரண பேர்வழி என்று சொல்லித் தட்டிக் கழித்து விட முடியாது. அவர் பெரிய சங்கீத பரம்பரையில் வந்தவர். சங்கீதக் கலையின் நுட்பத்தை நன்கு அறிந்தவர் எனச் சிறந்த சங்கீத வித்வான்களாலேயே பாராட்டப் படுபவர். இவ்விதத் தகுதிகளாலேயே, சங்கீத வித்வத் சபையார் தாங்கள் நடத்தும் மகாநாட்டுக்கு இவரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். ஆகவே, அவரது பேச்சை அவர்கள் அலட்சியஞ் செய்வதற்கில்லை.

தமிழிசை விரோதிகள் தாங்கள் ஏதோ கர்நாடக சங்கீதத்தின் கௌரவத்தைக் காப்பதற்கே தலைகீழாக நிற்பதாகக் கூறிவருகிறார்களே! ஸ்ரீ சுப்பராம பாகவதர், இன்று கர்நாடக சங்கீதம், அதன் கௌரவத்தைக் காப்பாற்றுவதாகச் சொல்லும் கோஷ்டியாராலேயே எவ்விதம் பலவீனப்படுத்தப்பட்டு வருகிறதென்பதைப் பின்வருமாறு வெகு அழகாக விளக்குகிறார்:—

"இப்போதுதான் கர்நாடக சங்கீதம் என்பது எது? எங்கிருக்கிறது? என்பதை ஜாக்கிரதையோடு கவனிக்க வேண்டிய நிலையிலிருக்கிறது. சாஸ்திர லக்ஷணம் அமையப்பெறாத பாட்டுகளெல்லாம் சங்கீதம்தானென்று பாடும் பாடகர்களும் அதை ஆதரிக்கும் ஒரு சில சமுதாயங்களும் ஒருவரை யொருவர் அபிமானித்துவருவதே நமது கர்நாடக சங்கீதத்தின் உன்னத லக்ஷியம் சற்று தளர்வடைவதற்குக் காரணமாக இருக்கிறது." இவ்விதம் இன்றுள்ள நிலையை எடுத்துக் காட்டிய ஸ்ரீ சுப்பராம பாகவதர் ஜன சமுதாயத்தின் அபிப்பிராயத்தை அனுசரித்தே சங்கீத வித்வான்கள் நடந்துகொள்ள வேண்டுமென்று புத்தி கூறும் முறையில், "தற்காலத்தில் ஜன சமுதாயத்தின் ஆதரவிருந்தாலன்றி வித்வான்களுக்கு வேறு வகையில்லை. ஆகவே, பொதுஜன நோக்கத்தை யனுசரித்து வித்வான்கள் தொழில் செய்யவேண்டியவர்களாய் இருக்கிறார்கள். ஆதலால் பொதுஜன அபிப்பிராயத்தை யொட்டி, கர்நாடக சங்கீத முறையைக் கைவிடாமலும் கவனித்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு வியாபகமாயுள்ள வித்வான்களைச் சேர்ந்ததாயிருக்கின்றது." என்று கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. கர்நாடக சங்கீதத்தின் அபிவிருத்திக்காகவே ஸ்தாபிக்கப்பெற்றிருப்பதாகச் சொல்லப்படும் சங்கீத வித்வத் சபையாரும் மற்றும் ராகப்பிரதான கோஷ்டியாரும் உண்மையிலேயே கர்நாடக சங்கீதத்தின் கௌரவத்தைக் காக்க விரும்புவார்களானால் ஸ்ரீ சுப்பராம பாகவதர் கூறியுள்ள புத்திமதியையும் யோசனைகளையும் ஏற்று நடந்தால் நலமாயிருக்கும். அதைவிட்டு, சுயநல நோக்கோடும் குரோத மனோபாவத்தோடும் வீண் கிளர்ச்சி செய்வதால் பயனில்லை. அவர்கள் எதிர்பார்க்கும் நோக்கமும் நிறைவேறாது என்று எடுத்துக்காட்ட விரும்புகிறோம்.



# பொங்கலோ பொங்கல்

1

பொங்கற் புதுநாள் புலர்ந்தது! புலர்ந்தது!!
தங்கிய சிறப்பின் தாயும் சேயும்
மங்கல நன்னாள் மாண்புறக் காண
எங்கணும் வீட்டை இயல்புற மெழுகி
பண்ட பாத்திரம் பரிவுடன் துலக்கி
துள்ளிய மாகவே வெள்ளையு மடித்து
துலங்குமப் பொழுதில் விளங்கு நல்லோரை
விரைவி லனலிட விரைந்துலை யேற்றி
பாற் பொங்கலை பார்த்திருந் தவர்கள்
பொங்கல் பொங்கும் பொலிவினைக் கண்டு,
"பொங்கலோ பொங்கல்! பொங்கலோ பொங்கல்!!
போற்றிய திருநாள் பொங்கலோ பொங்கல்!!!"
என்றே யவர்கள் எத்தொலி யெடுக்க
பொங்கலும் வந்தது புன்மைக ளகல
நாட்டில் நல்வளம் நாளும் பெருக
போரெனு மரக்கன் புழுந்து மடிய
அஞ்ஞான மெனு மகவிரு ளகன்றே
திங்க ளொளியாம் திகழறிவு பரவி
வாழ்க எங்கணும் வளம்பல கொண்டே
ஆண்டவன் தன்னருள் அளித்தே
பூண்ட நல் லாசியும் புகழும் ஓங்கவே.

—நாகூர்—எம். கனகசபை.

2

இன்பமென் றெண்ணிடும் போதினிலே—பொங்கல்
இளமை யரும்பி வருகுதடி!
துன்பக் கொடிக ளறுகையிலே—எந்தத்
துயரம் மிஞ்சிடும் பாரினிலே? 1.

காலை யெழுந்ததும் வேலைசெய்தோம்—இப்போ!
கண்கள் மகிழ்ந்திடு பொங்கலுண்டு!
மாலை படிந்ததும் வீடடைந்தோம்—இப்போ!
மங்களப் பொங்கலைக் கண்டிடுவோம்! 2.

பளிச்சிடும் வெண்கலப் பானையடி—இது
பக்கத்திலே மிக நேர்த்தியடி!
ஜொலித்து மிளிக்கிடும் பாங்கினியே—ஒரு
நிர்மல வண்டினைச் சோதியடி! 3.

(302-ம் பக்கம் பார்க்க.)

# தமிழ்மறை அருளிய தெய்வம்

("மைவண்ணன்")

(சென்ற இதழின் தொடர்ச்சி)

அதன்பின் மங்கையர்க்கரசி என்னுடன் நடந்தவாறே, "ஆமாம்; நாதா! கோயிலில் யாரையுங் காணோமே! என் ஐயனைத் தரிசிக்க—வழிபட எவரும் வருவதில்லையா!" என்று சோர்ந்த குரலில் வினவினாள்.

"வராம லிருப்பார்களா! மழையா யிருப்பதால் ஒரு வேளை யாரும் வராம லிருக்கக் கூடும்" என்று நான் அவளுக்குச் சமாதானம் கூறினேன்; ஆனாலும், என் மனதிலும் இதே கேள்வி எழுந்ததால், எதிரிலிருந்த பண்டாரத்தைப் பார்த்து, "என் ஐயா, இந்தக் கோவிலுக்கு யாரும் சுவாமியைத் தரிசிக்க வருவதில்லையா?" என்று கேட்டேன்.

மிகக் குழைவும் பணிவுங் காட்டிய அப் பண்டாரம், "இல்லிங்க சாமி, இந்தக் கோவிலுக்கெல்லாம் யார் வராங்க? அக்கம் பக்கத்தி லிருப்பவங்க கூட எட்டிப் பார்ப்பது கிடையாதுங்க.—இப்படித்தான் உங்களைப்போல புண்ணியவான்கள் எப்போதானும் வந்து, நாயனாரைத் தரிசித்துட்டுப் போவாங்க......" என்று கூறினான்.

"அப்படியா!" என்று நான் சொல்லி, "ஆமாம், இந்தக் கோவில் பூசை யெல்லாம் எப்படி நடக்கிறது? யார் இதற்குத் தர்மகர்த்தா?" எனக் கேட்டேன்.

பண்டாரம், "இந்தக் கோவிலுக்குத் தர்மகர்த்தா ஒரு முதலியாருங்க. அவர்தான் பூஜை முதலியதுக்கெல்லாம் செலவு செய்யாருங்க. இந்தக் கோவிலுக்குங் கொஞ்சம் சொத்து இருக்குதுங்க. கோவிலு தென்னமரத்துலே இருந்து வர வருஷ வருமானத்தாலும் மற்ற சொத்துலெ இருந்து கிடைக்கும் வருமானத்தாலுந் தான், நித்திய கால பூஜையெல்லாம் நடந்தேறி வருது. போறும் போறாததுக்கும் குறையறதுக்கும் எங்க தர்மகர்த்தா தன் கையெ விட்டுப் போட்டு குறைவில்லாம கோவில் காரியத்தெ நடத்தி வருகிறாருங்க. மிகவும் திலமாக் கவனிப்பா ரற்று கிடந்த இந்தக் கோவிலெ 'கடலகத்'திலே நமச்சிவாய முதலியாருன்னு இருந்தாங்களே; அவரு தம் சொந்த செலவில் சீர்படுத்தித் தரையெல்லாம் கடப்பைக் கல்போட்டு மண்டபம் கட்டி வைச்சாருங்க......அதுக்குமுன்னே இங்கே ஈ காக்காகூட நடமாடறதில்லிங்களாம். கோவிலைச் சுற்றிப் புல்லும் பூண்டும் முள்ளும் புதருமா இருக்குமாம்.........இப்பிடிப் பாழாக் கிடந்த கோவிலைப் பழுதுபார்த்த பிற்பாடுதான் நாங்க இங்கே வந்திருந்து விளக்கேத்தி வைச்சி வேளாவேளைக்கி பூஜை செய்து வர்றோமுங்க." என்று கோயிலின் நிலைமையை விவரித்தான்.

"உனக்கு ஏதாயினும் சம்பளமுண்டா? அல்லது கோயிலிலே கிடைக்கிற காசுதானா?"

"கோவில்லே வரும்படிக்கு வழியேதுங்க. இன்னைக்கி நீங்க வந்த மாதிரி எப்போதாயினும் யாரானும் வந்தா, நீங்கக் கொடுத்தாப்போல ஏதானும் கொடுப்பாங்க. மற்றப்படி ஏதுங்க. அதுவும் அத்தி பூத்தாப்

போவத்தான். எங்க அதிர்ஷ்டத்தைப் பொறுத்ததுங்க. இன்னிக்கு நான் நரி முகத்திலே விழித்தாப்போல, தருமவான் நீங்க வந்து தாராளமா தட்சிணை கொடுத்தீங்க. என் பிள்ளை குட்டிங்கெல்லாம் உங்களை வாழ்த்துங்க.—எனக்குச் சம்பள மென்னுன்னு கேட்டீங்க இல்லே? மாசம் ஆறு ரூபா கொடுக்கிறாங்க. அதில்லாத நான் குடும்பத்தோடு இங்கேயே இருக்க, அதோ தென்கிழக்கு மூலையிலே இருக்குது பாருங்க; அந்த இடத்தை விட்டிருக்கிறாங்க. அவ்வளவுதானுங்க. என்னமோ நாயனாரு அருளாலேயும் உங்களை போல புண்ணியவானுங்க கிருபையாலேயும் நானும் என் பொண்சாதி பிள்ளைங்களும் ஒருவிதமா காலந்தள்ளி வரோங்க."

"நாயனாருக்குத் திருவிழா நடக்கிறதுண்டா? அபிஷேகம் யாராயினும் செய்கிறார்களா?" என்று நான் மீண்டும் கேட்டேன்.

பண்டாரம், "திருவிழாவாவது! திருவிழாவாவது! அதெல்லாம் இல்லைங்க. மயிலாப்பூர் கபாலி கோவில்லே அறுபத்துமூவரு திருவிழா நடக்குது பாருங்க. அன்னைக்குத்தான் மத்த அடியாருடன் சேர்ந்துக்கிறதுக்கு நாயனாரு புறப்பட்டுப் போவாருங்க. வள்ளுவரு ஜன்ம நட்சத்திரத்துக்குத் தருமகர்த்தா தானோ அல்லது மற்றவங்களைப் பிடிச்சோ சுவாமிக்கு அபிஷேகஞ் செய்து வைப்பாருங்க" என்று பதிலளித்தான்.

"அவ்வளவுதானா?" என்று நான் பெருமூச்சு விட்டேன். மங்கையர்க்கரசி என்னைக் கூர்ந்து நோக்கினாள். அவள் முகத்தில் துயரத்தின் சாயை படர்ந்திருந்தது.

"தமிழ்மக்கள் தங்களுக்கு நால் வேதங்களினும் மேலான தமிழ்வேதத்தைத் தந்த செந்நாப் போதாருக்குக் கொடுத்திருக்கும் கௌரவத்தைப் பார்த்தீர்களா? எவ்வளவு லட்சணத்தில் இருக்கிறதென்று" என்று மங்கையர்க்கரசி என்னை நோக்கிக் கூறத்தொடங்கி, "நாதா! தேவதேவனைக் கண்டு களிகூர வேண்டுமென்று நான் எவ்வளவு உற்சாகத்தோடும் ஆர்வத்தோடும் வந்தேனே, அதெல்லாம் இக் கோயிலினுள் அடியெடுத்து வைத்ததுமே பறந்துவிட்டது அதுவும் தாரணிக்கே தமிழ்மகளிரின் கற்பின் திறம் இத்தன்மையதென, தமது நற்குண நற்செயல்களால் எடுத்துக்காட்டிய வாசுகியம்மையார் அழுக்கேறிய சிற்றுடையுடன் காட்சியளித்ததைக் கண்டதுமே என் மனம் விண்டு விட்டது. அதற்கப்புறம், நாயனார் நாதியற்றவர்போல் சீர் சிறப்புகளின்றி எழுந்தருளி யிருப்பதைப் பார்த்ததும், என்னால் துக்கத்தைத் தாங்க முடியவில்லை. இப்படி, தங்கள் பெரும்புலவரைப் போற்றி வராத தமிழ்மக்களும் தமிழ்நாடும் அன்னியர்க்கு அடிமைப்பட்டு அல்லலுறுவதில் ஆச்சரியமென்ன இருக்கிறது? திருவள்ளுவர் போன்ற பெரியவர்களைப் பேணாதிருந்து வரும்வரை, தமிழ்நாட்டுக்கு உய்தி யேது? விமோசன மேது?" என்று மனம் நொந்து கூறினாள்.

நான் ஒன்றுஞ் சொல்லமாட்டாது வாளா விருந்தேன். மங்கையர்க்கரசி மீண்டும் பேசலானாள். "காதலா! நான் மேனாட்டார் தங்கள் கலை நாகரிகங்களைப் போற்றி வளர்த்து வருவதையும், கலைவாணர்களைக் கௌரவித்து வருவதையும் அதனால் அவர்கள் பல துறைகளிலும் முன்னேறி வருவதையும் சுட்டிக்காட்டி, அவர்களின் நல்லியல்புகளைப் பாராட்டி, நம் நாட்டு மக்களின் பிற்போக்கான நிலைமை எடுத்துக் கூறினால், நீங்கள்

"என்ன! நீ சதா மேனாட்டாரைப் புகழ்ந்த வண்ணமாக இருக்கிறாயே! அவர்கள்தான் மனிதர்கள்; நம்மவர்கள் மனிதர்களில்லையா?' என்று கேட்பீர்களே! இப்போது, இதற்கு என்ன சொல்லுகிறீர்கள்? நம்ம நாட்டவர்கள் தங்கள் புலவர்களையும் பெரியோர்களையும் எவ்வளவு மதிப்பு கொடுத்துப் போற்றுகிறார்கள்; பார்த்தீர்களோ இல்லையோ! இதுபோன்ற ஒரு நிலையை மேனாட்டில் எங்காயினும் நீங்கள் காட்ட முடியுமா! அங்குள்ளவர்கள் தங்கள் கவிஞர்களையும், அறிஞர்களையும் வீரர்களையும் எவ்விதமாகக் கௌரவித்து வருகிறார்கள் என்பது நீங்கள் அறியாததா! ஷேக்ஸ்பியர் (Shakespeare) போன்ற கவிகளை ஐரோப்பியர் தெய்வத்திலும் மேலாகப் பாவித்து வழிபட்டு வருகின்றனர். ஷேக்ஸ்பியர் பிறந்த இடமாகிய ஸ்டிராட் போர்டும் (Startford on Avon), ஓர்ட்ஸ்வோர்த் (Wordsworth) என்ற இயற்கைக்கவி பிறந்த இடமாகிய காக்கர்ஸ்மவுத் (Cockersmouth)தும் இன்று உலகப் பிரசித்தி பெற்றுவிட்டன. உலக மக்களெலாம் அங்கு சென்று திரள்கின்றனர். மாணவர்களாயுள்ளவர்களோ மேற்படி புலவர்களின் பிறப்பிடங்களைத் திருப்பதிகளாகக் கருதி விடுமுறைக் காலங்களில் சென்று கண்டு களித்து வருகின்றனர். அப் புலவர்கள், அறிஞர்களின் சின்னங்கள் ஏதாயினும் கிடைத்தால், அவர்கள் உபயோகித்த எழுதுகோல் முதலிய பொருள்கள் கிடைத்தாலும், அவைகளை மேனாட்டார் பொன்னேபோல் போற்றிக் கண்காட்சிகளில் வைத்து காத்து வருகின்றனர். ஆனால் நம்ம நாட்டு மக்களோ.........? இதிலிருந்து மேனாட்டில் கவிஞர்கள், அறிஞர்களுக்குக் கொடுக்கப்படும் மரியாதையும் நம் நாட்டில் கவிஞர், அறிஞர்களிடம் காட்டப்படும் அலட்சியமும் நன்கு தெரிகிறதல்லவா! பிற நாட்டினரெல்லாம் பல துறைகளிலும் முன்னேறி உயர்நிலை யடைந்தவரும் இக்காலத்திலும் நம் நாட்டினர் எத்துறையிலும் முன்னேற முடியாது தாழ்ந்திருப்பதற்கு உரிய பல காரணங்களுள், புலவர் பெருமக்களைப் பேணாதது முக்கிய காரணமென்பதை நீங்கள் இப்போதாயினும் ஒப்புக் கொள்வீர்களா?" என்று உணர்ச்சி ததும்பக் கேட்டான்.

"உண்மை; ஒப்புக் கொள்ளுகிறேன். முற்றிலும் உண்மை. ஆனால் ஒன்றை மட்டும் உனக்கு எடுத்துக்கூற விரும்புகிறேன். நமது நாட்டு மக்கள் தாய்நாட்டுப்பற்று, தாய்மொழிப்பற்று இல்லாமலிருப்பதற்கும், கலை நாகரிக வளர்ச்சிகளில் கவலையில்லாம லிருப்பதற்கும் காரணம், அன்னியர் சேர்க்கையும் ஆதிக்கமுமே யாகும். மேனாட்டு நவநாகரிகத்தில் கொண்ட அளவுகடந்த மோகமே நம் மக்கள் பெரும்பாலாரின் மதியை மழுங்கச் செய்து, உணர்ச்சி யற்றவர்களாக்கி விட்டது என்பேன். அத்துடன், பண்டைக்காலத்தில் இருந்தவர்கள் பிற்கால சந்ததிகளுக்குச் செய்ய வேண்டிய முக்கிய கடமையினின்றும் தவறி விட்டார்கள் என்பதையும் இங்கு கூறவேண்டும். நம் மூதாதையர் தங்கள் காலத்து நாட்டு நடப்பையோ, புலவர், அறிஞர், வீரர்கள் வரலாறுகளையோ எழுதிவைத்துச் செல்லவில்லை. ஆகவே, இன்றைய சந்ததியார் தங்கள் பண்டைப் பேரறிஞர்களைப் பற்றியும், வீரர்கள் முதலியவர்களைப் பற்றியும் அறிவதற்கு வாய்ப்பில்லாது போய்விட்டது. மேனாட்டார் அவ்விதமல்ல. அவர்கள் தங்கள் தேச சரித்திரங்களைமட்டு மல்லாமல், ஒவ்வொரு துறையிலும் பிரசித்தி பெற்ற கவிஞர், வீரர் முதலியவர்களுடைய வரலாறுகளையும் ஒழுங்காக எழுதி வைத்திருக்கிறார்கள். அதனால் அவர்கள் தங்கள் புலவர் முதலி

யோரின் பெருமைகளை யறிந்து போற்றுவதற்கு வசதியிருக்கிறது? நம் நாட்டில் திருவள்ளுவரையோ, கம்பரையோ, மற்ற புலவர்களையோ, மன்னர்களையோ குறித்து அறிந்துகொள்வதற்கு என்ன சாதனம் இருக்கிறது? கன்ன பரம்பரையாக ஆங்காங்கு வழங்கிவரும் பலவிதமான கதைகளைக் கொண்டே திருப்தியடைந்து வந்திருக்கிறோம். இப்போதுதான் சில காலமாக, தென்னிந்திய சிலாசாஸன ஆராய்ச்சியின் பயனாக, நம் கவிஞர்கள், மன்னர்கள், மகான்கள் சிலரைப் பற்றிய செய்திகள் சிறிது சிறிதாகக் கிடைத்து வருகின்றன.—எனக்குக்கூட திருவள்ளுவர் பெருமான் திருக்கோயில் இத் திருமயிலையில் இருக்கிறதென்பது எப்படித் தெரியும் என்று நினைக்கிறாய்? இந்தக் கோயில் இருக்கிற வீதி யிருக்கிறதே முண்டகக் கண்ணியம்மன் கோவில் தெரு; அதில் 'கம்பர் விலாஸம்' என்ற பெயரோடு ஒரு வீடு இருக்கிறது. அதில் வாழ்ந்திருந்தவர் "அகநானூறு" பதிப்பாசிரியர் ஸ்ரீ உப. வே. இராஜகோபால ஐயங்கார் என்னும் தமிழ்ப்புலவர். எனக்குத் தமிழ் அறிவூட்டி இலக்கியச் சுவையை நுகரச் செய்தவர்களில் அப் பெரியார் ஒருவர். அவர் 'நாலடியார்' என்னும் நீதிநூலுக்குப் புதிதாக ஒரு குறிப்புரையும், 'அகநானூறு' என்னும் சங்க நூலுக்குத் தமது ஆசிரியர் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் எழுதிவைத்துச் சென்ற குறிப்புரையுடன், சேது சமஸ்தான வித்வான் ஸ்ரீ ரா. இராகவ ஐயங்கார், தமிழ் லெக்ஸிகன் கமிட்டி தலைமை யாசிரியர் ஸ்ரீ மு. இராகவ ஐயங்கார் ஆகிய 'இராகவ விம்மம்'களின் உதவியையுங் கொண்டு மற்றும் வேண்டும் குறிப்புகளும் எழுதிப் பதிப்பித்து வருகையில், அச்சமயம், கல்லூரியில் வாசித்துக்கொண்டிருந்த என்னுடைய சேவையையும் வேண்டியதால், அவருக்கு அவ்வகையில் என்னாலான உதவியைச் செய்வதற்காக அடிக்கடி அவரது இல்லத்துக்கு வருவதுண்டு. அச் சமயங்களில் தான் அவர் இங்கு திருவள்ளுவர் திருக்கோயில் இருக்கும் விஷயத்தைத் தெரிவித்து தரிசனமுஞ் செய்து வைத்தார். அதன் பின், சமயம் நேர்ந்தபோதெல்லாம் நான் இங்குவந்து தமிழ்த் தெய்வத்தை வழிபட்டுச் செல்வதை வழக்கமாகக் கொண்டேன். இதற்குப் பின், சிறிது காலத்துக்கெல்லாம் எனது இயற்றமிழ் ஆசிரியரான 'திருக்குறள் விளக்கம்' ஆசிரியர் ஸ்ரீ கி. குப்புசாமி முதலியார் சில அறிஞர்களின் விருப்பத்துக்கு இணங்க, இக் கோயிலில் இம் மண்டபத்தில் ஞாயிற்றுக்கிழமை தோறும் காலை எட்டு மணியிலிருந்து ஒன்பது மணிவரை திருக்குறள் வகுப்பு நடத்தி வரலானார். ஆகவே, நான் அவருடன் வாரம் தவறாது வரவேண்டியதாயிற்று. இவ் வகுப்புக்கு, ஜில்லா நீதிபதியா யிருந்து ஓய்வு பெற்றிருந்த திவான் பகதூர் சுப்பையா பிள்ளை முதல் அநேக வக்கீல்களும், சர்க்கார் காரியாலய உத்தியோகஸ்தர்களும் மற்றும் அறிஞர்களும் எல்லாம் வருவார்கள். கிறிஸ்தவ சகோதரர்கள் ஞாயிற்றுக் கிழமைகளில் மாதா கோவில்களுக்குச் சென்று பிரார்த்தனை நடத்திவிட்டு வருவதை முறையாக வைத்திருப்பதுபோல், நாங்களும் ஞாயிறுதோறும் திருக்குறள் வகுப்பை முன்னிட்டு, இக்கோயிலுக்கு வந்து வள்ளுவரை வழிபடுவது வழக்கமாயிற்று. இத் திருக்குறள் வகுப்பு நடைபெறுவது வாயிலாக, இங்கு திருவள்ளுவர் கோயில் இருப்பது பலருக்குந் தெரிய ஏதுவாயிற்று.—இவ்வித சந்தர்ப்பங்கள் எனக்கு வாய்க்காவிட்டால், நானும் உன்னைப்போல வருந்த வேண்டியவனே.—ஆம்! எதற்கும் ஒருகாலம் வரும். அப்போது எல்லாம் சரியாய்ப் போய்விடும்.—இப்போதே, நம் தமிழ்நாட்டில் ஒரு சிலர்

நம் கவிஞர்கள், அறிஞர்கள், மகான்களின் பெருமையை யறிந்து வருவதாகத் தெரிகிறது. கம்பன் திருவிழா, திருவள்ளுவர் திருநாள் என்றெல்லாம் இப்போது ஒரு சிலராயினுங் கூடி, சிற்சில இடங்களில் கொண்டாடி வருகிறார்கள். ஆகவே, உணர்ச்சியற்றிருக்கும் தமிழ்மக்கள் கூடிய சீக்கிரம் விழிப்படையப் போகிறார்கள். ஆதலால், நாம் வீணே கவலைப்படுவதை விட்டு, நம் தமிழ்நாட்டுச் சகோதர சகோதரிகளை உறக்கத்தினின்றுந் தட்டி யெழுப்புவதற்கான திருத்தொண்டை மேற்கொள்வோம்:—அன்பே! நாம் இங்கு வந்து வெகுநேரம் ஆகிவிட்டது. போவோமா!—மழையும் சிறிது விட்டிருப்பதாகத் தெரிகிறது. வா! நமது தமிழ்த் தெய்வத்தை இன்னொரு முறை தொழுதுவிட்டுப் போவோம்" என்று அழைத்தேன்.

மங்கையர்க்கரசியின் முககமலம் சிறிது மலர்ந்திருந்தது. அவள் தனக்குள் ஏதோ ஒருவித முடிவுக்கு வந்தவள்போல் காணப்பட்டாள். "நாதா! தமிழ்மக்களுக்குத் 'திருப்பள்ளி யெழுச்சி' பாடுவதுதான் இனி என் வேலை. எனது லட்சியத்தை வெற்றிகரமாக நிறைவேற்ற திருவள்ளுவ தேவனின் திருவருள் துணை நிற்கவேண்டும். அவ் வகையில், அப்பெருமானை எத்தனைமுறை வேண்டுமாயினும் வழுத்தவும் வணங்கவும் சித்தமா யிருக்கிறேன்" என்று கூறியவாறு என்னுடன் நடந்தாள். அவள் வதனத்தில், உறுதி பிரதிபலித்தது.

கடைசியாக, நானும் மங்கையர்க்கரசியும் மாதாநு பங்கியின் மலரடிகளை மீண்டுமொரு முறை வணங்கிவிட்டு, வெளியே நடந்தோம். அச்சமயம் மழை சிறு தூறலாய் இருந்தது. ஆகவே, நான் மங்கையர்க்கரசியின் கரத்தைப்பற்றி விரைந்து நடந்து காரில் ஏறச் செய்து நானும் ஏறினேன். அடுத்த கணம் கார் எங்கள் மாளிகை நோக்கிக் காற்றாய்ப் பறந்தது. நான் திரைச்சீலையை மூடிவிட்டு என் காதலியின் எழில் வதனத்தை நோக்கினேன்.

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ் நாடு."

என்ற பாரதி பாடலை அவளது குமுதவாய் இசைத்துக் கொண்டிருந்தது. "ஆமாம்; அதற்கென்ன சந்தேகம்? தமிழ்நாடு வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்டதுதான்." என்று ஒத்துப் பாடினேன்.

---

(297-ம் பக்கத் தொடர்ச்சி.)

துள்ளிக் குதித்தோடும் மாடுகளே—பார்க்க
துல்லிய மாமாயன் சாயலடி!
அள்ளி யெடுத்தே கொடுத்திடடி—பொங்கல்
ஆகாயச் செங்கண்ணன் உண்டிடுவான்!

வானம் மலர்ந்திடும் நேரத்திலே—மயில்
வண்ணத்தோகை விரித் தாடுதடி!
தான தருமங்கள் செய்திடுவோம்—உயர்
தமி ழெடுத்திங்கே பாடிடுவோம். 5.

—எம். முத்துகிருஷ்ணன்.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(ஸி. பி. ஆனந்தம்.)



## 16. சனி உலகம்—அதன் இயற்கை அமைப்பு

இதர கோள்கள் எவற்றி னிடமும் காணக் கூடாத சிறப்பியல்கள் பலவும் இதனிடத்தே காணக்கூடியனவாக விருக்கின்றனவென வான நூலார் தெரிவிக்கின்றனர். அவ் வியல்களின் பலவும் பல பாகத்திற்கு (Predictive Side of Astrology) முக்கியம் வாய்ந்தன வென்னல் மிகையில்லை. அதாவது நம் முன்னோர் கண்டு வைத்த பல பாக அம்சங்களுக்கு இக்காலத்து ககோள ஆராய்ச்சிக்காரர்கள் கண்டு வருவன யாவும் தக்க விளக்கங்க ளாகவும்—அவற்றின் உண்மைகள் பலவற்றையும் உறுதி செய்வனவாகவும் பெரும் பகுதிகள் இருக்கின்றன. அம் முறையில், அதன் இயற்கை அமைப்புகளை முதற்கண் சற்று விவரிப்போம்.

சனி உலகம் சூரிய அண்டத்தி லிருந்து எண்ணூற்று எண்பது லட்சம் (8, 880,00, 000) மைல் தூரத்தே இடம் பெற்றிருக்கின்றது. வியாழனுக்கும்—சூரியனுக்கும் இடையே உள்ள தூரம் எவ்வளவோ அவ்வளவு தூரம் சற்றேறக் குறைய வியாழனுக்கும்—சனிக்கும் இடையே இருக்கின்றது. நாம் வசிக்கும்—பூமிக்கும்-சூரியனுக்கும் இடையே இருக்கும் தூரத்தைப் போல ஒன்பதரை (9.5) மடங்கு அதிக தூரம் பூமிக்கும்—சனிக்கும் இடையே உள்ளது எனக் கணக்கிட் டிருக்கின்றனர்.

பூமியி லிருந்து இவ்வளவு தூரத்தே இருக்கும் சனி அண்டம் நம் கட்புலனுக்குத் தெரியக் கூடுமானதாகவே இருக்கின்றது. தூர திருஷ்டிக் கண்ணாடி வழியே காணும்போது இதர கிரகங்களைப் போன்று இது தனித்திருக்க வில்லை என்று தெரிகிறது. ஒரு நீண்ட வளையத்தினுள்ளே இது வீற்றிருக்கின்றது. இந்த வளையம் பிரகாசம் மிக்க இரண்டு கூறுகளா லாயது. ஒன்று உட்புறத்தும், மற்றொன்று வெளிப் புறத்துமாக அவை இரண்டும் அமைந் துள்ளன. உட்புறத்துள்ளது வெளிப்புறத் துள்ளதைக் காட்டினும் அதிகம் ஒளியுடன் இலங்குகின்றது. இந்த உட் சக்கரத்தி னுள்ளே மூன்றாவதொரு சக்கர மொன்று காட்சி தருகிறது. அதன் காட்சி அதி விசித்திரமான மோகன வடிவுடன் சோபை மிக்க எழில் நிறைந்ததாகும். அதன் வண்ணம் (Colour) நீல மேக சாமள மென்னும் படி ஒளி வீசுகின்றது.

இந்த வளையங்களைப் பற்றிய விவரங்களையே 'மதி வளையங்கள்' என்று சென்ற இதழில் தந்திருக்கின்றோம். இவ் வளையங்கள் பதினேழாம் நூற்றாண்டில் முதன் முதலாகக் கண்டனர். அப்பொழுது இவ் வளையங்கள் சக்கர வட்டம் போன்று தொடர்ச்சியாகவும்—கெட்டியாகவும் இருப்பனவென்று கருதினர். ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் லப்லாஸ் (Laplaco) என்னும் நிபுணர் இவ் வளையங்களின் இயக்கத்தை நன்கு ஆய்ந்து, இவை கெட்டியான தொடர்ச்சி கொண்டன வன்று என நிரூபித்தார். இதிலிருந்துதான் சனி உலகைச் சுற்றிய வளையங்கள் தனித்

தனி இயங்கும் சிறு சிறு அங்கங்களின் (உறுப்புக்களின்) தொடர் கூட்டம் என்று நம்பப்படுகிறது. ஆனால், இவ் வளையத் தொகுப்பு வெறுந் தோற் (Optic Illusion) என்று கருதுவோர்களு மிருக்கின்றனர். சனிக் கிரகம் தன்னைத் தானே வேகமாகச் சுற்றிச் சுழன்று வரும் விரைவில் எழுகின்றது. அத் தோற்றம் என்பது அவர்களுடைய கட்சி. தோற்றமே யாயினும்—உண்மையாயினும் காட்சிக் குரிய வளையங்கள் சனி உலகின் சிறப்பியல்களுக்கு அணி செய்கின்றன வென்றே மதிக்கலாம்.

இனி, இவ் வளையங்களின் நடு வீற்றிருக்கும் சனி அண்டத்தின் இயற்கை அமைப்புக்களைக் கவனிப்போம். பரிமாணத்தில் வியாழனுக்கு அடுத்தது சனி அண்டமே யாகும். அதன் பரிமாணம் பூமியினுடையதினும் எழுநூற்று எண்பத்து நான்கு பங்கு பெரியது. இதன் குறுக்களவு எழுபத்து ஓராயிரத்து ஐநூறு (71, 500) மைல்களாகும். பூமியின் குறுக்களவினும் ஒன்பதரை (9.5) மடங்கு அதிகமானது. இதன் மேற் பரப்பு எண்பத்து ஒரு மடங்கு பூமியினும் விரிந்தது. இதன் துருவ முனைகள் இரண்டுக்கும் இடையிலுள்ள குறுக்களவு வியாழனுடையதினும் ஐயாயிரம் மைல்கள் குறைந்தது.

இதற்கு பூமியைப் போலவே தன்னைத்தான் சுற்றி வரும் ஒரு கதியுமுண்டு. அது அவ்விதம் தன்னைத்தான் சுற்றி வரும் மிகு விரைவுதான் அதன் இரு துருவ முனைகளும் மிகவும் தட்டையாக விருப்பதற்குக் காரணமென்கின்றனர். அது தன்னை ஒரு தரம் சுற்றி வருவதற்கு பத்தரை மணி நேரமே தான் சற்றேறக்குறைய ஆகிறதெனக் கணக்கிட்டிருக்கின்றனர்.

சூரியனை நடுவாக்கி அதனைச் சுற்றி ஓடும் கோள்களுள் இதுவும் ஒன்றாகும். எனவே, சனிக்கோள் சூரிய குடும்பத்தைச் (Solar System) சார்ந்த தெனவே சேர்க்கப்படுகிறது. தன்னை மிக விரைவாகச் சுற்றிச் சுழன்றுகொண் டிருந்தாலும், அது சூரியனைச் சுற்றி வரும் வேகம் மிகவும் மந்தமானது; எல்லாக் கோள்களினும் மிகக் குறைந்த வேகத்தில் தான் சூரியனைச் சுற்றி வரும் தன் பிரயாணத்தை அது செய்து வருகின்றது. அதாவது விநாடிக்கு ஆறு மைல் வேகத்தில் அது சூரியனைச் சுற்றி ஓடுகிறது. அந்த வேகத்தில் ஒரு முறை அது சூரியனைச் சுற்றி வருவதற்கு முப்பது வருடங்கள் (சில வாண்டு) ஆகிறது. இவ்விதம் மந்தமான கதியைக் கொண்டிருப்பதால், இந்தக் கிரகத்தை 'மந்தன்' என நம் நாட்டாரும், லீட் (Lead) என மேலை நாட்டினரும் இதற்குப் பெயர் தந்திருக்கின்றனர்.

இதன் இயல் ஒளி வியாழனுக்கும்—சுக்கிரனுக்கும் குறைந்தது. உடுக்களில் அக்னி நக்ஷத்திரம் தவிர ஏனைய மீனங்கள் யாவினுக்கும் மேலாக அதிக ஒளி கொண்டதாகத் தோற்றும். இதன் ஒளி செக்கிறத்தன்னது. ஆனால், செவ்வாயின் உடையதைப் போன்றதல்ல. (தொடரும்)

---

நமது "ஆனந்தபோதினி"க்கு இருபத்தெட்டாவது ஆண்டு பிறந்திருப்பதை முன்னிட்டு, பூனா, U. K. பாலகிருஷ்ணன் அவர்கள் ஒரு ரூபாய் நன்கொடையாக அளித்திருக்கிறார். இவ்விதம் நமது போதினியின் வளர்ச்சியில் ஆர்வங்கொண்டு நன்கொடை வழங்கிய அவருக்கு இறைவன் எல்லா நலன்களும் கொடுத்து மகிழ்விக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

# “காப்பற்றவள்”

(மு. ச. உசைன் முனவ்வர்பேக்)

அலமு ஒரு குருடி. இருண்ட உலகில் அவள் தனியே உலவினாள். வாழ்க்கையின் எல்லா இன்ப நுகர்ச்சியும் அவளுக்கு மறுக்கப்பட்டிருந்தது.

பழம் பெருமை மறந்த மதுரைமா நகரில், மலம் நிறைந்த ஒரு சந்தில் அவள் தன் பெற்றோர்களுடன் வாழ்ந்தாள். வறுமையால் வாடிய அவள் பெற்றோர் அவளை துன்புறுத்தியது வியப்பன்று. கொந்தளித்த அலமுவின் கடலில், பெற்றோர் அன்பெனும் தெப்பமும் கவிழ்ந்தது.

அலமு கண்ணொளியற்ற அழகி. இன்பம் வழியும் தன் திருமுகத்தைப் பலர் நோக்கி, கனிந்து வருந்துவதை அவள் உணரவில்லை. இழந்துபட்ட தமிழனது யாழ் அவள் மென்மலர்க்கைகளில் விண்ணிசை எழுப்பியது. அலைஅலையாக எழுந்து, விசும்பிலே பரந்து, கேட்பாரது உடலையும், உள்ளத்தையும் உயிரையுமே கொள்ளை கொண்டது அவ்விசைத் தெள்ளமுது. மதுரையின் தெருக்கோடிகளில். அலமு இசையரங்கு பல நடாத்துவாள். கொந்தளித்த உள்ளம், யாழின் நரம்பூடே குமுறி எழுந்தது போலும் எல்லா உலகமும் இருள் வாய்ப்பட்டு, கலையறியாத மாக்களாக, மக்கள் வாழ்ந்த காலத்து விழுமியதோர் நாகரிகத்தை தமதெனக் கொண்டு, செம்மை மிக்க ஒரு மொழிக்கு வரம்பு கண்டு கலையில் வாய் கழீஇத் திமிர்ந்து, ஒழிந்த பழந்தமிழ் மக்கள், கடல் வாய்ப்பட்ட குமரியின் நடுவிலிருந்து, எம்மவருக்கு உணர்ச்சி பூட்டுமாறு அனுப்பிய ஒரு குமரிக்கன்னி போலும்.

அலமு பாடுவாள். எத்துணை நயம் நிறைந்த பாட்டு. அதில் தன்னை மறந்த அலமு காசின்றி வீடு திரும்புவாள். பட்டினி. பெற்றோரின் வசை மொழியும், பிறவும். அலமு கண்ணீர் விடாது கலங்குவாள்.

## 2

தம்புச்செல்வன் அப்பொழுது அமெரிக்கன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். திருச்சிராப்பள்ளியில் செல்வமாக வாழ்ந்த ஒரு செத்தவர் குடும்பத்தில் பிறந்தவன். உலகியல் அறியாத பேதை.

பகலவன் மெதுவாக மறைந்து கொண்டிருந்த மாலைவேளை. வைகையின் புது வெள்ளத்தை, அவன் செக்கிறக்கதிர்கள் பொன்வெள்ள மாக்கின. பாண்டியனை மடக்கிய மாபெரும் வன்மையை, மதுரை மக்களுக்கு, அவள் அன்று காண்பிக்க விழைந்தனள் போலும். பரந்த வெண்மணலில் நேற்று படுத்து உறங்கிய வைகை, இன்று வீறிட்டெழுந்து பொய்யாக்குலக் கொடியாக மாறிய சிறப்பை நோக்கி, நோக்கி வியந்து கொண்டிருந்தான் தம்புராஜ். அவ் ஆற்றுநீர் எழுப்பியது யாழின் இசை.

எங்கிருந்தோ எழுந்தது ஒரு பேரிசை. ஆற்றிசையோடு கலந்து உறவாடிற்று. எங்கணும் இசை மயம். உலகமே இசையான் இயங்கியது

போதும். மெதுவாக எழுந்த யாழிசை விண்ணையே பிளந்து அலறிற்று. தம்பு மெய்மறந்தான். இசை வந்த திக்கு நோக்கிச் சென்றான். அழகு வழிந்த ஏழைச் சிறுமி ஒருத்தி அவண் இசையெழுப்பினாள். ஏறிட்டு நோக்காது, எதையும் விரும்பாது, இசையில் மாழ்கி நின்றாள், அக் குமரிக் கன்னி. எழிலிசையும், இசைப்பயனும் இவள்தானோ என்று தம்பு எண்ணினான்.

சட்டென்று பாட்டு நின்றது. உருக் குலைந்திருந்த யாழொடு அலமு வீடு திரும்பினாள்.

"இசைச் செல்வி, நில்," என்றான் தம்பு.

"நான் கண்ணற்றவள், தாங்கள் யாரோ?"

"யான் அமெரிக்கன் கல்லூரி மாணவன். உன் பாட்டு என்னை இங்கு ஈர்த்தது. நீ யார்?"

"நான் ஒரு அனாதை. மதுரையம்பதியிலே நோக்கமின்றி பாடுபவள். அதோ! அந்த கொல்லர் தெருவின் ஒரு சந்திலே என் தாய் தந்தையருடன் வசிக்கின்றேன். தாங்கள் அங்கு வரலாம்" என்றாள் அலமு.

தம்பு அவளைப் பின் தொடர்ந்தான். இருண்ட ஒரு சந்தின் வழியே அலமு அவனை அழைத்துச் சென்றாள். வறுமையால் வாடிய பல நடமாடும் பிணங்கள் போவதும், வருவதுமாயும் இருந்தன. தெருவோடு தாழ்ந்திருந்த ஒரு வீட்டில் அலமு நுழைந்தாள். அவ் வீட்டில் பல குடும்பங்கள் வாழ்ந்தன. மலமும், அழுக்கும் நிறைந்திருந்தன. ஒரு மூலையில் இரண்டு கிழப்பிணங்கள் சுருண்டு கிடந்தன. "என் பெற்றோர்" என்று அலமு, தம்புவுக்கு அறிமுகப்படுத்தினாள். கிழிந்த ஒரு கோரைப்பாய் தான் அவர்கள் சொத்து. அதில் தம்பு அமர்ந்தான். அலமு பாடினாள்.

"மங்கையர்க்கரசி, வளவர்கோன் பாவை, வரி வளைக்கை மடமானி
பங்கயச் செல்வி, பாண்டிமாதேவி பணிசெய்து, நாடொறும் பரவ
பொங்கழ லுருவன், பூதநாயகனார், வேதமும் பொருள்களு மருளி,
அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த ஆலவாய் ஆவதும் இதுவே."

"அலமு, சேக்கிழார் தந்த எழுத்தோவியம், உன் கைகளில் உயிர் ஓவியமாகத் திகழ்கின்றது. நீ எவ்வாறு கற்றாய்?"

"பரந்த இயற்கை எனக்கு பாலூட்டி வளர்த்தது. விண் வழங்கிய ஒளியையும், மண் வழங்கிய பசுமையையும் காணாத நான் யாரும் கேட்காத இயற்கையின் நாதத்தைக் கேட்டேன். விண்ணும், மண்ணும், உடுக்களும், கோள்களும், எனக்கு கற்பித்தன" என்றாள் அலமு.

மீண்டும் வருவதாகச் சொல்லி, தம்பு கல்லூரிக்குத் திரும்பினான்.

3

தம்பு நாடோறும் அலமுவைக் கண்டான். தீயுமிழும் பாலைவனத்தில் 'வாவியை'க் காணும் அராபியனைப்போல், அன்பற்ற வாழ்வில் அலமு

தம்புவைக் கண்டாள். உவகையால் அவள் சிறிய உள்ளம் பொங்கி வழிந்தது. காணாத ஒன்றைக் கண்டபோது 'ஆர்கிமிடிஸ்' (Archimedes) என்ற விஞ்ஞானி, "யுரீகா" (Eureka) (கண்டேன்) என்று கூவிக்கொண்டு தெருவூடே பித்தனைப்போய் ஓடி வந்தான் என்று சரித்திரம் கூறுகின்றது. கண்ணற்ற அலமுவின் பெருமகிழ்ச்சி யாழின் வழியே எழுந்தது. தெருவில் பாடுவதை அவள் நிறுத்திவிட்டாள். தம்புவே அவள் வாழ்க்கையின் குறிக்கோள். அவனே கரையேற்ற வந்த தெப்பம். அவன் மறக்கப்படுவனேல் அவள் இல்லாது ஒழிவாள். மீறி எழுந்த மனித உணர்ச்சியை அவள் எவ்வாறு தடுப்பாள்? புதுமை கனிந்த ஒரு உலகில் அவள் உலவினாள்.

4

மாறுபட்ட தம்புவின் வாழ்க்கை மாணவர்கட்கிடையே ஆராயப்பட்டது. மதுரைநகர் தெருக்களில் இசை யெழுப்பி வாழும் ஒரு அனாதைப் பெண்ணே அதற்குக் காரணம் என்பதை உணர்ந்த அவர்கள் கதை பல புனைந்துரைக்க எழுந்தார்கள். எழுந்த சொல் திருச்சியவரை எட்டியது. தம் ஒரே மகன் மதுரையில் பாழாகி விடுவான் என்று தம்புவின் பெற்றோர் பதைத்தனர். மதுரைக்கு ஓடிச் சென்றார்கள். நண்பர்கள் உதவி கொண்டு அலமுவின் சிறுகுடிலை அடைந்தார்கள். அவள் அப்பொழுது பாடிக் கொண்டிருந்தாள். சின அரவையும், மதகரியையும் மடக்கிய யாழ், மக்களை தாக்காது விடுமோ? உளங்குழைந்து, நெக்கு, நெக்குருகினார்கள்.

"அலமு நீதானே அம்மா?"

"ஆம். தாங்கள் யார்?"

"திருச்சியிலிருந்து இப்பொழுதுதான் வந்தோம். தம்பு எங்களுடைய புதல்வன். அவனை நீ அறிவாயோ?"

"ஆம். தம்பு எனது அன்பன்" என்றாள் அலமு.

"அலமு. தம்பு, திருச்சிராப்பள்ளியில், தொன்றுதொட்டு வந்த பழங்குடிமக்கள் வழித்தோன்றல். எங்கள் இருவரின் எதிர்கால வாழ்வு. மனைவாழ்க்கையில் புகுத்தப்பட வேண்டிய ஒரு உடன் பிறந்தாள் அவனுக்குண்டு. பலரது வாழ்வே அவனோடு பிணிக்கப்பட்டிருக்கின்றது. அதைப் பாழாக்கும் பொறுப்பை ஏற்பவர் யார்?"

"கொலைக்குற்றம் செய்ய வல்லோர், ஐயனே" என்றாள் அலமு. சோர்வையோ, ஏமாற்றத்தையோ, அச்சத்தையோ, அக்குரல் காண்பிக்கவில்லை.

"ஆம் குழந்தாய். அப் பெரியதோர் குற்றத்தின் கவிலேயே நீ இப்பொழுது இருக்கின்றாய். தம்புவின் வாழ்வை விட்டும் நீ உன்னை அகற்றிக் கொள்ளுதலே ஏற்புடைத்து. உனக்கு வேண்டும் பொருள் நான் வழங்குவேன்."

"அன்பிற்கும், பொருளுக்கும் தொடர்பில்லை. தம்புவின் வாழ்வு, என் வாழ்வு. நீங்கள் சென்று வரலாம், என்னை மன்னிக்கவும்."

"அலமு........"

"என்னை அவள் வாழ்க்கையினின்றும் பிரித்துக் கொண்டேன். நீங்கள் சென்று வரலாம்."

தம்புவின் பெற்றோர்கள் அங்கிருந்தும் நீங்கினர். கிழப் பெற்றோரை உடனழைத்துக்கொண்டு அலமு மதுரையினின்றும் நீங்கினாள். பரந்த உலகிலே அவள் எங்கேயோ சென்றாள்.

5

பதினைந்து ஆண்டுகள் ஓடி மறைந்தன. தம்பு "ஈவ்லீன்" (Eveline) என்ற அழகியுடன், திருச்சியில் "டெலிபோன் இன்ஜினியராக" வேலை பார்த்து வந்தான். ஆனைகட்டி வெளியில், அழகியதோர் வீட்டில் அவர்கள் இன்பவாழ்க்கை நடாத்தினர். ஒருநாள் மாலை ஆறு மணிக்கு தம்பு, தன் வீட்டின் முன் பொறி வண்டியினின்றும் இறங்கினான். வந்த வாடையில் ஒரு பிச்சைக்காரி அங்கு யாழொடு பாடினாள்.

"மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம் வளவர் திருக்குலக் கொழுந்து வளைக்கை மானி"......அவள் சென்றுகொண்டே இருந்தாள்.

"அலமு" என்று அலறினான் தம்பு. குமுறி எழுந்த அச்சொல், அப் பரந்த வெளியிலே உலவிற்று.

"அவள் யார்?" என்ற பெண் குரல் அவன் பின்னால் கேட்டது.

"துயிலும் தமிழனை, இசையால் எழுப்பும் தியாகச் செல்வி. அவள் குமரிக்கன்னி அடி" பதினைந்து ஆண்டு கால வாழ்விலே, தன் காந்தன் குரல் தழுதழுத்ததை "ஈவ்லீன்", அப்பொழுதுதான் உணர்ந்தாள்.

## ஜீவிய சந்தாதார்

இவ்வருஷம் நமது "ஆனந்த"னுக்கு சிலோன், கொழும்பு இன்பர்மேஷன் ஆபீஸைச் சேர்ந்த சோம-சரவணபவன் ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்துள்ள நற்செய்தியைப் பெரு மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்ளுகிறோம். நம் "ஆனந்தனை" ஆதரவு செய்யும் நோக்கத்துடன் ஆயுட் சந்தாதாரராக முன்வந்த சோம-சரவணபவன் அவர்களுக்கு நமது மனப்பூர்வமான நன்றியறிதலைச் செலுத்துவதோடு, அவர் எல்லா நலன்களும் பெற்று இனிது வாழ அருள்புரிய வேண்டுமென்று இறைவனை இறைஞ்சுகிறோம்.

பத்திராதிபர்.

# உலக சுபாவம்

(க. சிதம்பரம் பிள்ளை.)

## 1

உலகம் பலவிதம். மனிதர்களுடைய உருவம், குணம், செயல் முதலிய ஒவ்வொன்றும் பலவகையான வித்தியாசங்களுடன் விளங்குவது உலகத்தின் இயற்கை. சிலருக்கு உண்மை பேசுவதென்றால் வேப்பங்காயாக இருக்கும்; பொய்யும் புனைசுருட்டும் என்றாலோ, கற்கண்டைப்போல் தித்திக்கும்!

சவுகரியம் குறைந்த ஒருவன் சவுகரியமுள்ள ஒருவரிடத்து ஏதேனும் ஒரு காரியமாகச் சென்று, அதை நிறைவேற்றிக் கொடுக்கும்படி அவரைக் கேட்பதாக வைத்துக் கொள்வோம். அவர் நல்லெண்ணம் நிறைந்த யோக்கியராக இருந்தால், உடனே அவ்வொத்தாசையைச் செய்து அவனுக்கு உதவி புரிவர். அல்லது, அது தம்மால் ஆகாதென்றாவது பளிச்சென்று சொல்லி விடுவர்.

அவ்வாறு சொல்லி விடுவதில் தப்பொன்றும் இல்லை. ஏன்? யாசித்துச் சென்றவன் உடனே வேறொருவரிடத்துச் சென்று அதை யடைய முயற்சிக்கலாமல்லவா?

சிலருடைய செய்கை அப்படியில்லை. ஆகட்டும், ஆகட்டும் என்றே ஆசை வார்த்தை சொல்லிப் பலநாள் நடத்துவர். உதவி கோரிச் சென்றவனும் அவரைப் பூரணமாக நம்பி யிருப்பான். ஆனால், ஆகட்டும் என்று தவணை வைத்துக்கொண்டு வந்த அவரோ, கடைசியாகக் கையை விரித்து விடுவர்!

இன்னும் சிலர் அது கூடச் செய்யமாட்டார்கள். உதவி கோரிச் சென்றவன் தானாக நின்று கொள்ளும் வரையில் தவணையே சொல்லிக் கொண்டே வருவர்! இத் தகையோர்களைச் செய்ந்நன்றி மறக்கும் பாதகர்களை விடக் கொடியவர்களாக எண்ண வேண்டுமாம்.

> "இசையா ஒருபொருள் இல்லென்றல் யார்க்கும்
> வசையன்று, வையத் தியற்கை;—நசை யழுங்க
> நின்றோடிப் பொய்த்தல், நிரைதொடீ! செய்ந்நன்றி
> கொன்றாரிற் குற்றம் உடைத்து."

[இசையா ஒருபொருள்=தம்மால் ஆகாத ஒன்றை; வசையன்று=பழிப்பல்ல; நசையழுங்க நின்றோடிப் பொய்த்தல்=உதவி கோருபவருடைய ஆசை கெடும்படி தவணை வைத்தல்.]

## 2

இந்த உலகத்தில் மனிதனுக்குப் பணந்தான் முக்கியம். பணம் மட்டும் இருந்து விட்டால், அவனுக்கு மற்றெல்லாம் தாமாகவே வந்து சேரும்.

கேள்வி முறையில்லாமல் மூலை முடுக்குகளில் கிடந்தவர்கள் கூட அவனிடத்து வந்து நெருங்கிய உறவின் முறை கொண்டாடுவர். அவனுக்கு அந்த நிலையில் பந்துசனங்கள் வானத்தில் காணப்படும் நட்சத்திரங்களை விட அதிகமாக வந்து சூழ்வர்.

அதே மனிதன் விதி வசத்தால் அப் பணத்தை இழந்து ஏழையாகி விடுவதாக வைத்துக் கொள்வோம். அச் சுற்றத்தார் யாவரும் அந்த நிமிடத்திலேயே சொல்லாமற் கொள்ளாமல் மாயமாய் மறைந்து விடுவர். அச் சுற்றத்தாரில் ஒருவரைப் பார்த்து: 'இன்னாரைப்பற்றி உமக்குத் தெரியுமா, உம்முடைய சொந்தக்காரர்தானே அவர்?' என்று கேட்டால், 'அப்படி யென்று சொல்லிக் கொள்கிறார்கள், அவ்வளவுதான்' என்று பதில் கூறுவர்.

"காலாடு போழ்தில் கழிகிளைஞர் வானத்து
மேல்ஆடும் மீனிற் பலராவர்;—ஏலா
இடர் ஒருவர் உற்றக்கால், ஈர்ங்குன்ற நாட!
தொடர்புடையேம் என்பார் சிலர்."

[கால்ஆடு போழ்தில்=நினைத்த இடம் போவதற்கு வசதியுள்ள செல்வம் உள்ள காலத்து; கழிகிளைஞர்—மிக்க உறவினர்; ஏலா இடர்=தாங்காத வறுமை.]

3

"பெரிய மனிதன் வார்த்தைக்குத்தான் விலை."

"அப்படி யென்றால் பெரிய மனிதன் யார்?"

"அவன்தான் பணக்காரன்."

"ஆனால் வயதிலும் படிப்பிலும் ஒழுக்கத்திலும் உயர்ந்தவன் பெரிய மனிதன் இல்லையா?"

பணக்காரன் ஒருவனே. வயது, படிப்பு, அறிவு என்பதெல்லாம் பணத்தின் முன் நிற்கமாட்டா. பொருத்த மற்றதும் அநீதியானதுமான சொற்களைப் பணக்காரன் சொன்னபோதிலும், மற்றவர்கள் அவற்றை அப்படியே ஒப்புக்கொள்ளத்தான் செய்வர்.

நல்ல சாதிப் பசுவாக இருந்தால் அதன் இளங்கன்று கூட எப்படி நல்ல விலை பெறுமோ, அதுபோல் பணக்காரன் வயதில் மிகச் சிறியவனாக இருந்தபோதிலும், அவனுடைய வார்த்தைக்கும் நல்ல மதிப்பு இருக்கும்.

வயது, படிப்பு, அறிவு இவற்றால் உயர்ந்தவனாக இருந்தபோதிலும் அவன் ஏழையாக இருப்பானே யானால், அவன் சொல் அம்பல மேறாது. போதுமான ஈரமில்லாத நிலத்தில் உழும்போது கலப்பையானது சரியானபடி உள்ளே பாயாமல் எப்படி மேலுக்குமேல் எகிறி எகிறிச் செல்லுமோ, அதுபோல் அவன் வார்த்தையும் மற்றவர்களால் மதிக்கப்பட மாட்டாது."

"நல்லாவின் கன்றுயின் நாகும் விலைபெறும்;
கல்லாரே யாயினும் செல்வர்வாய்ச் சொல்லும்
புல்ஈரப் போழ்தின் உழவேபோல் மீதாடிச்
செல்லாவாம் நல்கூர்ந்தார் சொல்."

[நாகும்=இளங்கன்றும்; புல்ஈரப் போழ்தின்=அற்ப ஈரத்தையுடைய காலத்தில்.]

4

"தத்துவம், வேதாந்தம் முதலிய ஞானநூல்களைப் படிப்பது எதற்காக?"

"அவைகளைப் படிப்பதால் அறிவு விருத்தி யடையும்; உலகப் பொருள்களிற் சென்று கொண்டிருக்கும் புலன்கள் அடக்கம் பெறும்; அதனால் ஆசை அறும். எப்பொழுது மனிதனுக்கு உலகப் பொருள்களில் ஆசை அறுகிறதோ, அப்பொழுதே அவனுக்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்பு என்ன என்பது வெளிச்சமாய் விடும்."

"அப்படி யென்றால் தத்துவம், வேதாந்தம் முதலிய அறிவு நூல்கள் பலவற்றை அப்படியே கரைத்துக் குடித்த அநேகர் உலகப் பொருள்களுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கிறார்களே, அது ஏன்?"

அதுதான் இயற்கைக் குணம். மனிதனுக்கு இயற்கைக்குணம் என்ன செய்தாலும் மாறாது. இந்தக் குணம் படித்தவர்களிடத்தும் சொற்பக் காரியங்களிலிருந்து பெரிய காரியங்கள் வரை காணத்தான் செய்யும்."

"சிலர் தங்களுடைய படிப்பின் காரணமாக கெட்ட வழக்கங்களிலிருந்து சீர்திருந்துவ தில்லையா?"

"உண்டு; அதுவும் அவர்களுடைய இயற்கைக் குணத்தால். சொன்னால் தெரிந்து கொள்ளக்கூடிய இயற்கைக்குணம் இருந்து, அவர்கள் அறிவு நூல்களைப் படிக்கவும் செய்வார்களேயானால், உடனே அவர்கள் சீர்திருத்தம் பெறுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. இயற்கைக் குணம் கெட்டதாக இருந்து, என்னதான் அறிவு நூல்களைப் படித்தபோதிலும், அவர்கள் சீர்திருத்தம் பெற மாட்டார்கள்; அவர்களுடைய இயற்கைக் குணந்தான் முன்னுக்கு நிற்கும். உப்பு, நெய், பால், தயிர், பெருங்காயம் முதலிய சத்துப் பொருள்களைச் சேர்த்து பக்குவமாகச் சமைத்தபோதிலும் பேய்ச் சுரைக்காயில் இயற்கையாகவுள்ள கசப்பு எப்படி மாறும்? ஒருபோதும் மாறாது."

"இடம்பட மெய்ஞ்ஞானம் கற்பினும் என்றும்
அடங்காதார் என்றும் அடங்கார்;—தடங் கண்ணாய்!
உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்து அடினும்
கைப்புஅறு பேய்ச்சுரையின் காய்."

[இடம் பட=விரிவாக.]

# பகவான் புத்தரின் பாத மகிமை

(பூறுக்கலை-எம். எஸ். ஆதிமூலன்.)

பூரணச் சந்திரன் தனது முழு அதிகாரத்தையும், உலகிற் செலுத்துவதற்கு வசந்த ருது காலமே தகுதியுடையதெனக் கருதினன் போலும். சில காலங்களில் அம்மதியின் அதிகாரத்துக்குச் சில தடைகள் ஏற்படுவது இயற்கையே. மழைக்கம்மல், மூடுபனி, சிறுமழை, பெருமழை இவ் வகையிலுள்ளவைகள், சந்திரனுடைய பிரகாசத்தை மாற்றி விடக்கூடியதே. இன்னும், இலங்கையின் மேல்பகுதியில் மேற்குறித்த மூடுபனி வகைகள், அதிகமாய்க் காணும். மதியொளியை மாத்திரமல்ல, ரவி யொளியையும் மறைத்து விடும். விளக்கணைப்புத் திட்டத்துக்கு இவை உதவி புரியும். ஆனால் நாம் குறிப்பிடும் தினத்தில் எவ்வகைத் திட்டமோ, பனியோ, தூரலோ, முழுமதியின் நல்லொளியால் வெட்கின வெனலாம். இவ்வாறு வசந்த ருதுவில், அம்மதி தனது வெள்ளிய கிரணங்களை மிக ரமணியமாக உலகிற் பரப்பினன். சம சீதளத்தை ஜீவ ராசிகளுக்குத் தந்து குதூகலப் படுத்தினன். ஆடவர், பெண்டிர், அருமைக்குழந்தைகள் முதலிய யாவர்களின் உளத்திலும், சந்தோஷ ஊற்றை அன்றிரவில் உண்டாக்கியவை அந்த முழுமதியே யாகும். சிறப்புள செங்கதிர் இடப ராசியிலும், சேர்பெறு மாமதி விருச்சிக அரணிலும், சம நோக்காக உலவுங் காலாகிய, கடந்த வைகாசி மாதம், பௌர்ணமியும், விசாகமும், கூடிய தினத்தையே நாம் இங்ஙனம் குறிப்பிடுகிறோம். சீர்வளம் நிலவளம் மிக உன்னதமா யமைந்த இலங்காபுரியின் ஓர் பகுதியில் இரு மருங்களிலும் பற்பல விருக்ஷங்கள், செடி கொடிகள் தானாகவே மிக்க வனப்புடன் செழித்து வளர்ந்து, அச் சாலையை அலங்கரித்துக் கொண்டிருந்தன.

அதன் வழியாய்க் கும்பல் கும்பலாகவும், தனித்தனியாகவும், பல மாந்தர்கள் பலவித சந்தோஷ வார்த்தைகளைப் பேசிக்கொண்டு அதிக உல்லாசமாகக் கால் நடையாக நடந்து வந்தனர். மோட்டார் சைக்கிள் முதலிய வாகனங்களின் சௌகரியத்தை, சோமு அன்று தினம் வெறுத்ததும் முழு மதியின் அன்பினாலேயே. சோமுவின் இல்வாழ்துணைவி ராதா, ஒன்றரை வயதுள்ள தனது செல்வப்புதல்வன் "மணி"யைத் தூக்கிக் கொண்டு கொஞ்சிக் குலாவி வந்தனள். மணிக்கு ஓர் சந்தோஷம் கிளம்பி விட்டது. வானத்தை அண்ணாந்து பார்த்தான். "அம்புலி! அம்புலி!!" என்றழைத்தான். ராதாவுக்கு ஆனந்தம். "எங்கே குழந்தாய்! இன்னுமொருதரம் சொல்லப்பா!" பின்பும் மணி:—"அம்புலி! அம்புலி!!" சோமுவுக்கு பரமானந்தம். மணியை வாங்கி முத்தமிட்டான். "கண்ணே! ஆடிய பாதா என்று சொல்" மணி, "ஆயப்பாய!" ராதாவுக்கும் சோமுவுக்கும் மதலையின் அன்புச்சிரிப்பு!

இவர்களோடு கூட வந்த இவர்கள் அடுத்த வீட்டு சிங்களச் செல்வி லீலா, உடனே மணியை வாங்கி இரண்டு கன்னங்களையும், மாறி மாறி முத்தத்தால் நிறைத்து விட்டனள். "என் செல்வமே! இங்கு பார்! பொன்னான நெற்றியில் என்று சொல்' என்றாள் லீலா. மணி "பொன்னா நெட்ன்" என்றான் கொஞ்சிக் குளறின மழலைச் சொல்லால். இதைக் கூர்ந்து கவனித்து மகிழ்வுற்று இவர்களோடு வரும் பௌத்த சோதரன் ஜெயவர்தன்

வெகு விரைவொடு தனது மனைவி லீலா கரத்தில் மிளிரும் செல்வனை, அப்படியே வாரி எடுத்து மார்போ டணைத்துக் கொண்டான். கொஞ்சம் பாக்கியாக லீலா, வைத்திருந்த முத்தங்களை சுதனின் கன்னம், கபாலம், உச்சி முதலிய ஸ்தானங்களிலெல்லாம் கொடுத்து பூர்த்தி செய்து விட்டனன். மதலையை நோக்கி, "அன்பின் பெருக்கே! நான் சொல்வதைச் சொல். அம்புலி, அம்புலி! ஆடியபாதா!! பொன்னான நெற்றியில்!!! பொட்டொடு பொட்டு!!!!" என்று வரிசையாய்ச் சொல்லிக் கொடுத்தான் ஜெயவரதன்.

மணி, "அம்புலி அம்புலி! ஆஹீம்!! புட்டு புட்டு!!!" என்று மழலை மொழியைத் தேனாய்ச் சொரிந்தான். சோமு, ராதா, லீலா, ஜெயவரதன், நால்வரும் அத்தேனை களிவோடு பருகினர். எல்லோருக்கும், ஆனந்தச் சிரிப்பு. எவ்வளவு குதூகலம்! என்ன குழந்தையின் அன்பு! மத பேதமற்ற இவர்களின் ஒற்றுமை எத்தகைய உயர்வு?

"குழலினி தியாழினி தென்பதம் மக்கள்

மழலை சொற் கேளாதவர்."

எனும் நாயனாரின் திருவாக்கை பிரதியக்ஷமாய்க் கண்டு ஆனந்த வாரியில் ஆழ்ந்து களித்தனன் சோமு.

இவர்கள் பின்னால் ஓர் கார் வந்தது. அதில் அதிகார வேட்டைப் புலி இரண்டு சாய்ந்து கிடந்தன. அப் புலிகளுக்கு அக்கார் சொந்தமா? இல்லை. இரவலாகத்தா னிருக்கும். பெட்ரோல் கூப்பன் கால மல்லவா? புலிகள் யாவரெனில்! "கடைசி இந்திய னொருவன் இலங்கையை விட்டுப் போன பின் தான் என் மனம் நிம்மதி யடையும்" என்று சொன்னவர் அதி லொருவர். ஜெயவரதன் கூட்டத்தாரை மேற்படி ஆசாமி கூர்ந்து கவனித்தார். இத்தகைய அன்னியோன்னியமாய் இவர்கள் பரவச மடைகின்றார்களே! இவர்களுள் மதபேதம், சுயநலம், வீண் ஜம்பம், ஒன்றையும் காணவில்லையே! நாடு கடத்தும் திட்டம் நம் வார்த்தை யளவிலே நின்று விட்டதே! என அந்தப் புலியார் தன் மனத்தைப் புண்ணாக்கிக் கொண்டார். கண்களை கரங்கள் மூடிக்கொண்டன. ஏன்? வெட்கமும் அகம்பாவமுந் தான்.

"கொஞ்சம் நில்லுங்கள். பின்பு நடக்கலாம். தம்பிக்கு அந்தப் பாட்டை இன்னும் சொல்லிக் கொடுங்கள்" என்று சொல்லிக்கொண்டே லீலா, தான் வைத்திருந்த குங்குமச்சிமிழை, ராதாவிடம், "இதோ பார் தம்பி"யென்று காண்பித்து விட்டு, மணி இடம் போய் தம்பி! என்றாள். ஜெயவரதன் சொல்லிக் கொடுக்கிற பாட்டை புட்டுபுட்டு, என்று சொல்லிக் கொண்டிருக்கிறான் செல்வன். அதே நேரத்தில் தனது பௌத்திர விரலால் சிமிழிலிருந்த குங்குமத்தைத் தொட்டு மணியினுடைய அழகு பெறப் படர்ந்த நெற்றியில் லீலாவும் கொஞ்சுதலாக புட்டுபுட்டு என்று சொல்லிக் கொண்டே திலத மிட்டாள். மணிக்கு சிரிப்புக்குமேற் சிரிப்பு. சந்தோஷத்தால் துள்ளிக் குதிக்கிறான். கீழே விழுந்து விடாதபடி தன் அன்பரிடம் மணியை வாங்கி ராதாவிடம் கொடுத்தாள் லீலா.

ஜெய:—சோமு! சந்திரபிரபை இன்று எவ்வளவு அழகு பார்!

சோமு:—"ஆம் இன்று ஓர் புனிதமான நாளல்லவா?"

"உண்மைதான் பௌர்ணமிக்கு நாம் பாஞ்சாலை (பௌத்தமத ஆலயம்) போய் வணங்கி வருகிறோம் தானே?"

"ஆம்! வேறு மாதங்களில் நிகழும் பௌர்ணமிக்குமேல், இம்மாதம் இன்று வந்த சந்திரனுக்கு அதிக மகிமை உண்டு. அது உங்களுக்குத் தெரியாதா?"

"தெரியும். இன்று "புத்தர்" ஜெனித்த நாளெனச் சொல்லப்படுகிறது அதனாற்றான் இன்று "விசாக"ப் பெருநாளென்று நாம் அந்தப் பகவான் ஆலயத்துக்குப் போய், தரிசித்து வருகிறோம். ஆனால், அவரது ஜனனத்தைக் குறித்த முழு விபரம் தெரியவில்லை."

சரிதான்! நீங்கள் எப்படித் தெரிந்து கொள்ளலாம்? பௌத்த மதத்தைச் சார்ந்தவர்களல்லவா நீங்கள்?"

லீலா குறுக்கிட்டாள். சோமுவைப் பார்த்து, "ஏன் மதமென்று நீங்கள் பிரித்துப் பேசுகிறீர்கள்? எம்மதமும் சம்மதமில்லையென்று நினைக்கிறீர்கள் அப் பகவானுக்கு? அவர் பிறப்பின் விபரம் நீங்களும் அறிந்திருக்கத்தானே வேண்டும்."

"நாங்கள் அதை அறிவதற்குத்தான் என்ன உரிமை இருக்கிறது? எங்களை நாடு கடத்த எண்ணி நீங்கள் புறக்கணிக்கிறீர்களே யல்லாது எவ்வகையில் எங்களுக்கு உரிமை தந்திருக்கிறீர்கள்? அந்தப் புத்தருக்கும் அது சம்மதந்தானா?"

ஜெய:—சகல உரிமையும் உங்களுக்கு உண்டு. வாயாடி வம்பர்கள். அதிகாரவேட்டைப் புலிகள் பேச்சை ஏன் இப்போது கொண்டு வருகிறீர்கள்? அவர்கள் வாயளவிற்றானல்லாது நடத்தையிலென்ன சாதித்து விட்டார்கள்? நாடு கடத்த அவர்களால் முடிந்ததா? பகவான் புத்தர் அவர்கள் குடித்த மனப்பாலை தற்காலம் விஷப்பாலாக்கி இருப்பது நீங்களறிந்தவையே. விவசாயத் தொழிலில் தேர்ச்சிபெற்ற பாரத அன்னையின் புதல்வர்களைத் தேர்ந்தெடுத்தாற்றான், நாம் இனிக் கடைத்தேறலாமென்று அவர்கள் வாயிலிருந்து அவர்களை யறியாமலே இப்போது வருகிறதல்லவா?

சோமு:—ஆம்! ஆம்! ரொம்பச் சரி, அந்திய காலத்தில் அஸ்வத்தாமாவுக்குப் பட்டம் கட்டிவைக்க எண்ணினாற்போல், உணவுப்பஞ்சம் வந்த பின் தான், விவசாயத் தொழிலுக்கு இந்தியமக்களை எதிர் சென்றழைக்க வேண்டும். இந்தியத் தாய்க்கு அன்னக்காவடி சமர்ப்பிக்கவேண்டும். அவற்றையும் உள்ளன்பு நிறைந்த பக்தியோடு சமர்ப்பித்தால், அவ்வன்னை ஏந்து கொண்டு ஆதரிப்பதில் தடை என்ன? பல ஆண்டுகளாக, லட்சக்கணக்காக இலங்கையிலுள்ள இந்தியர்கள் மூலமாய் விவசாயத்தொழிலை விருத்தி செய்திருந்தால் உணவுப் பஞ்சத்தின் நிலை இப்படி நேருமா? இந்திய மாதாவும் இலங்காதேவியும் பரஸ்பர ஒத்துமையாய் நம்மைக் காப்பாற்றக் கூடுமல்லவா?

ஜெய:—சோதரரே! நீங்கள் கூறியவாறு, கூடிய விரைவில் அவ்வித ஒற்றுமை ஏற்படக் கூடும். பகவான் புத்தர் அவ்வாறு செய்வாரென, நாம் நம்பிக்கையோ டிருப்போம். அவர் யாவருக்கும், நன்மை செய்யக் கூடியவரே. மேலும், பௌத்தமதத்திற்கும், இந்துமதத்திற்கும், நெருங்கிய சம்பந்தமு முண்டு.

சோமு:—எப்படி?

லீலா குறுக்கிடாமலிருக்க மனமில்லை போலும்! "ஏன் நீங்கள் ஒன்று மறியாதவர்கள் போலவே கேட்கிறீர்கள்? சித்திரை மாதப் பிறப்பன்று, நீங்கள் சுவாமி தெரிசனம் செய்த பிரசாதம், ராதா எங்கள் வீட்டுக்குக் கொண்டு வந்தாள். அதை நம்ம மணிதன் செல்வக் கையால் எனக்குத் தந்தான். நாங்கள் வாங்கி விபூதி குங்குமம், தரித்துக் கொண்டோம். பொங்கல் சாதம் சாப்பிட்டோம் மணிக்கும் ஊட்டினேன், தம்பியைக் கேளுங்கள், இதிலென்ன வேற்றுமை? அன்று தினம் நானும், ராதா, மணி மூவரும் பகவானை வணங்கி வந்தோம். பாஞ்சாலையில், இது காரணமாகவாவது சம்பந்த முண்டா? அல்லது இல்லை என்கிறீர்களா?"

ராதாவும் சேர்ந்து கொண்டாள். "லீலா! லீலா!! நடந்த வருடம் பாரத நாட்டில் எங்களூரில் வைகாசி விசாகத் திருவிழா, வெகு விமரிசையாய் நடந்திருக்கிறது. அதே விசாகம், பௌர்ணமி வைகாசி இவை யாவும் இன்றைக்கு ஒற்றுமையாகத்தானே இருக்கிறது. "விசாக" எனும் நக்ஷத்திரத்தை "விசாக்" என்று சிறிது வித்தியாசமாய்க் கொண்டாடுவராய் பூசிக்கக் கூடுகிறார்களே!"

லீலா:—ஆம்! அதுவும் பொருத்தமாகத்தா னிருக்கிறது ராதா!

இவர்கள் நால்வருமே இவ்வாறு தர்க்கித்துக்கொண்டு நடந்தார்களானால் மணி மாத்திரம் சும்மா மௌனமா யிருக்க முடியுமா? செல்வன் கனிவாய் தேனைச் சொரிகின்றன. "அம்புலி அம்புலி! ஆயப்பாய!! புட்டு புட்டு!!!" இதுதானே அவன் கற்ற நூலில் சொல்லியது.

ஜெய:—சோமு! மணிக்குக்கூட இன்று எவ்வளவு குதூகலம்!! பகவானது ஜனன வரலாறு நீங்க ளறிந்தவரை தெரிவியுங்கள். மணியும் கேட்டுக் கொள்வான்.

ராதா! லீலா! இருவரும் ஒரே தொனியாய் நீங்களதைச் சொல்லுங்கள்.

சோமு:—நான் சொல்வதென்றால் சரித்திராதாரம் சரியா யில்லையே.

"நீங்களறிந்த மட்டில் நாங்கள் தெரிந்துகொள்ள விரும்புகிறோம்." என்றார்கள் லீலா, ஜெயவர்த்தன, ராதா, மணி, இந் நால்வரும். இவர்களோடு வழி நடையில் வந்து சேர்ந்து கொண்டவர்களும், கேட்டுக்கொண்டு வருகிறார்கள். சோமு தெரிவிக்கிறான். நாமும் அப் பகவான் வரலாற்றைச் சிறிது தெரிந்து கொள்வோம்.

மாநிலம் புகழவும், ஞானங்கள் திகழவும், பௌத்த மதத்தை ஸ்தாபிதம் செய்யவும், பல ஆண்டுகளுக்கு முன், புத்தர்கள் பலர் உலகிற் றோன்றியுளார். அவரவர்களும், தம்மாலாய நன்மைகளை அருளி மறைந்தனர். ஆயினும், இற்றைக்கு இரண்டாயிரத் தைந்நூறு வருடங்களுக்கு முன் "கௌதம புத்தர்" இப் பூவுலகின்கண் அவதரித்து, முன்னையோர் யாவரினும், சிறப்புற்றோங்கி, பல அரிய தொண்டை யாற்றினர்.

பருவதங்களிலே மிகப் பெரியதாகிய பருவத அரச னெனப்படும் ஹிமயமலைச்சாரலில், பல சிறிய வாவிகள் அழகாக ஓடிக் கொண்டிருக்கும். அவற்றுள் சப்த நதிகளி லொன்றாகிய கங்கைக்கு வடபாலுள்ள, ரோகிணி நதி தீரத்தில், கபிலவாஸ்து எனுமோர் நகரமுளது. அவ் விடத்தில், புகழ்த்தக்க திட சரீரமுள்ள பலர் வசித்து வந்தனர். இவர்கள் சாக்கிய ரெனப்படுவர். இவர்கள் உல்லாசமாக நேரங்கழிக்கு மிடம், லும்பினி எனும் பூங்காவனம், இதிலோர் பாகத்தில் அழகிய தடாகம். இத் தடாகத்தைச் சுற்றிலும் விருக்ஷங்கள் நிறைந்திருக்கும். அங்குறும் மக்களின் இதயத்தை ஆரோக்கியப் படுத்தும் நோக்காய் அத் தடாகத்தில், செம்மை, வெண்மை, நீலவர்ணம், பெற்ற தாமரைப் புஷ்பங்கள் ஒவ்வொரு திறமாய், ஒவ்வொரு புஷ்பங்களாய் புஷ்பித்து அழகு செய்து கொள்ளும். இந்த சாக்கிய ராஜதானியின் தலைமைக்காரியாலயம் கபிலவாஸ்து.

இந்நகரை சுத்தோதனன் எனும் நீதி மன்னன் நெறி வழுவாது செங்கோல் நடாத்தி வந்தான். அவனது வாழ்க்கைத் துணைவி மாயாதேவி யோடு, சந்தோஷமாக இல்லற தர்மத்தையும் சீர்பெறப் போற்றி வரலாயினன். இப் பூமியின்கண், சதிபதி எனும் இவ்விருவருஞ் செய்த நற்றவப்பயன்றான் யாது? எவ்வகை நோன்பை எவ்வழி நோற்றார்களோ? அறியோம்! இவர்கள் பிறவிக்குப் போதிய நற்பலன் கிடைத்து விட்டன. எங்ஙனம்? உத்தம குணபக்தி நிறைந்த மாயாதேவிக்குப் பிரசவவேதனை. நகரடங்கலும் சந்தோஷப் பேரொலி; மகவைக் காண மட்டற்ற ஆவல். தனது சோதரி பக்கலில் மாயாதேவி அமர்ந்தனள். மற்றும் சிலர் ஆங்கு குழுமி இருந்தனர். அன்றைய பூரணமதி குதூகலமாய்ப் பிரகாசித்தது. குவா! குவா!! என்ற இன்பத்தொனி, யாவருளத்திலும் நிறைந்து புளகாங்கிதம் செய்தது. சூரியப் பிரபை போன்ற ஆண்மகவு பிறந்தது. தேவர்கள் ஆசி மழை பொழிந்தனர். இம் மதலையின் ரூபலாவண்ணியத்தையும், மகிமையையும், காருண்யம் வாய்ந்த முக வசீகரத்தையும், யாம் வரையத் தகுதியன்று. சுதனைப் பயின்ற புண்ணியசீலர்களை யாவரும் மனமாற வாழ்த்தினர். மன்னன், மனைவி, மற்றுளோர் பலரும் ஆனந்த வாரியில் மூழ்கி சந்தோஷங் கொண்டாடி, குழந்தையைக் கொஞ்சிக் குலாவி மகிழ்ந்தனர்.

தவத்திற் சிறந்த அசிதர் எனும் மஹாயோகி அரசனது மாளிகையை நாடி வந்தனர். இவர் வரவை யறிந்த சுத்தோதன மன்னன், அன்னவரை, எதிர்சென்று பணிந்து அழைத்து வந்து தக்க ஆசனத்தமர்த்தி வணங்கினன். மன்னவனின் திருக்குமரனை அன்னவனே ஏந்தி வந்து, அசிதரின் பாதத்திற் கிடத்தி, மகவை ஆசீர்வதிக்குமாறு பிரார்த்தித்தனன். சுதனை அகமகிழ்வோடு மஹாமுனி வாங்கி அக் குழந்தையின் பாதங்களிரண்டை

யும் தனதிரு நயனங்களிலும் அன்போடு அணைத்துக் கொண்டார். என்ன ஆச்சரியமிது? எவ்வளவு மகிமை? எவ்வகை அன்பு? ஓர் சிறிய குழந்தையின் கால்களை மஹாயோகியான ஒருவர் தம் நேத்திரங்களில் ஒற்றிக் கொள்வதெனில் காரணம் யாது? மதலைக் கால்களின் வடிவழகைக் கண்டு பூரித்தனரா? அவ்வாறுமில் மெய்ஞ்ஞானிகட்கு உடல் வனப்பைக் கண்டு களிப்புற இதயம் நடை செய்யக்கூடுமே! வேறென்ன? பாதங்களிற் குழந்தையைக் கிடத்தி ஆசீர்வதிக்கும்படி வேண்டும் மன்னனின்புறச் செய்யும் ஆசீர்வாதமா? ஆசீர்வதிக்கும் முறை இஃதெனத் தெரியவில்லையே! யாதோவென யாம் சந்தேகிக்க வேண்டியதாகிறது. இதிலோர் ரகசியமிருக்கலாம். பாதம் பட்ட கண்கள் பகலவன்போற் பிரகாசிக்கக் கூடுமென்று கருதினரா? ஆம்! அவ்வித எண்ணமே! அவ்விதம் பிரகாசிக்கவே கூடும். ஜீவராசிகளை இரக்ஷிக்க வந்த திருப்பாதம். ஏழை மக்களின் இன்னல் களைய வந்த இன்பத் திருவடி. அதன் களங்கமற்ற ஒளி வெளிப்பார்வைக்காயமைந்த ஊனக்கண்ணை மாத்திரமன்று! அகத்துளமைந்த ஞானக்கண்ணையே நன்கு பிரகாசிக்கச் செய்யும். இப் பதமலரை அம் மஹாயோகி கண்களில் அணைத்ததில் ஆச்சரியமென்ன இருக்கிறது! இப் பகவான் பூவிற் ஜனித்த முழு ரகசியமும், "பகவான் புத்தரின் பாத மகிமை"யும் தவயோகி, நன்குணர்ந்தவராதலின், அத் திருமலரடியை தன் நயனங்களில் அணைத்தனர். இவ்வரிய மகத்துவம் வாய்ந்த மதலைக்கு "சித்தார்த்தர்" என நாமமிடப் பெற்றது. அசிதர் சித்தார்த்தரை பலவாறு போற்றிப் புகழ்ந்து அரசனிடம் விடைபெற்றுக் கொண்டேகினர்.

சித்தார்த்தர் கௌதம கோத்திரத்திற் ஜனித்ததால் கௌதமரென்றும், சாக்கிய குடியிற் றோன்றினமையால், சாக்கியரென்ற நாமமும் பெற்றனர். புத்தர் என்ற பெயர் பிற்காலத்தில் இவருக்குக் கிடைத்த ஆசிரமப் பெயராகும். இவர் வைகாசி மாதம், பௌர்ணமியும், விசாகமும் கூடிய சுபவேளையிற் ஜனித்தாய்ச் சொல்லப்படுகிறது. இவருக்குப் பெற்றோர் செய்யவேண்டிய கடமைப்படி கல்வி கற்பிக்கவேண்டியதவசியமல்லவா? ஆசிரியரும் இவருக்கு வேண்டுமோ? எங்கிருந்து வருவார் ஆசிரியர்? ஆனால் குருவுக்கு மிஞ்சின சிஷ்யரென இவரை நாம் சொன்னாற் குற்றமிராது. ஏன்? கல்வி கற்பிக்க ஓர் ஆசிரியர் வந்தார். அவர் சொல்லிக்கொடுக்க ஆரம்பிக்கும் பாடங்கள் அவ்வாசிரியர் வாக்கினின்று வெளிவரும் முன், பகவான் புத்தரின் அருள் வக்த்ரகினின்று விரைவில் உதயமாகி விடும். போதகர் சிறிது தவறுதலாய், ஏதேனும் சொல்லிவிடுவாராகில் அதை கௌதமபுத்தர் திருத்திக் கொள்வார். இந்நிலையில் போதகருக்கு பகவானிடத்தில் வேலை என்ன? அவர் சென்றனர். சகல கலைகளையும் பூர்வஜன்ம வாசனையால் தாமாகவே பகவான் நன்கு கற்றுணர்ந்தனர்.

இவர் மணப் பருவமடைந்ததறிந்து பெற்றோரும், மற்றோரும், யசோதரா எனும் அழகிய அணங்கை திருமணஞ் செய்து வைத்தனர். பகவானுக்கு அம் மங்கையின் கருப்பத்திலிருந்து செல்வன் பிறந்தான். இராகுலன் என்ற நாமம் சூட்டினார்கள். ஆயினும், பகவான் இதயம் இல்லறத்தை நாடவில்லை. தெருக்களிலும் சிறு குடிசைகளிலும், இவர் திருஷ்டிக்கு

அகப்பட்ட கோரச்செயல், பசிப்பிணி, துன்பம் இவை யாவும் இவர் உளத்தை உருக்கின. பூமியின்கண் மாந்தர்களிடையே பசிநோய் பெருங் கஷ்டம், அதிகச் சஞ்சலம், ஒருங்கமைந்து துன்புறும்போது நாம் அறு சுவையோடு உண்பதா? பஞ்சணையிற் துயில்வதா? சர்வசுகமும் நாம் மாத்திரம் அனுபவிப்பதா? வேண்டாம்! வேண்டாம்! ஏழைமக்கள் சர்வ சுகத்துடன் இன்புறவதே நமது சகல வைபவமுமாகும். இதற்கான வகையை நாம் தேட வேண்டுமென்ற எண்ணம் இவர் மனத்தில் வேரூன்றி விட்டது.

ஓர் நாளிரவு பூரணச்சந்திரன் பிரகாசித்துக் கொண்டிருந்தான். சித்தார்த்தர் அந்தப்புரத்துக்குச் சென்றார். நித்திரையி வாழ்ந்திருக்கும் தன் அன்புப் பிரியை யசோதரையையும் இன்பச் செல்வன் இராகுலனையும், ஒரு முறை பார்த்தார். உடனே வெளிப் புறப்பட்டார். தவயோகியின் நய னங்களிலமைந்த சாத்வீகத் திருவடி, மலைநதி வனாந்திரம் கடந்து சென்றன. ஏழை மக்களின் துன்ப நிவாரணத்துக்கு வகையாதென மனம் நைந்துருகி னார். அங்கொரு சந்யாசியை அணுகினார். அச் சந்யாசியின் உபதேசத்தில் அதிருப்தி யடைந்தார். பின்பும் சோர்ந்தார். என்னே கருணை உள்ளம். ராஜ்யாதிகாரமும், மணிமுடியும் சர்வபோக பாக்கியங்களையும் திரணமாய் மதித்த ஜீவகாருண்யத் திருவடிகள் அப்பால் நடந்தன.

பன்னிரு திங்களில் இரண்டாம் மதி! அன்று முழுமதி! நைரஞ்சாரா அல்லது பால் குளிர்நதி! அந்திக் கரையிலோர், அழகிய தரு. தருவினடியி லோர் சாத்வீக வொளி! ஒளியெனில் மிக்க உத்தமஜோதி! ஜோதியின் இனிது! சொல்வதற்கரிது! அரிதென நாற்பத்தைந்தாண்டுள மேனி! மேனியிலான்மவிளக்க மெய்ஞானி!

ஆம்! உண்மைஞானி! உயரிய ஜோதி! ஆ! களங்கமற்ற ஞான ஜோதி! ஞானஜோதி !! ஆஹா!

(சோமு மௌனம்) அப்பால் நாவெழவில்லை. எவற்றையோ உற்று அண்ணாந்து நோக்குபவனைப் காண்கிறான். அவ்வனமே ஸ்தம்பித்து விட் டான். அசைவற்று நிற்கிறான். கூடவந்த யாவரும், நின்றனர். நிசப்தம் சோமுவை யாவரும் நோக்கினர். செல்வன் மணி, லீலாவிட மிருந்தவன், தந்தை இடம் போகத் தாவினன். சோமுவின் கரங்கள் மதலையை அணைக்கவில்லை. அவன் இருதயம் எங்கோ லயித்து விட்டது. அவை அந்த ஜோதியை நாடியே!

ஜெயவரதன்:—(சோமுவின் தோளில் ஓர் கையை வைத்துக்கொண்டு) நண்பரே! சோமு! சோமு! ஏன் மௌனமாய் நிற்கின்றீர்கள்? சந்நியாசி யின் உபதேசத்தில் அதிருப்தி யடைந்த சித்தார்த்தர் அப்பால் நடந்ததாகச் சொன்னீர்கள். அதன் பின் தன்னை மறந்த விதமாய் ஏதேதோ பேசினீர் களே!

பின் சிறிதுநேரம் சோமு மௌனம் இதயத்தெழுந்த பக்தியின் வேகத் தையும் நயனத்தெழுந்த ஆனந்த பாஷ்பத்தையும் ஓர் வகையாய் தன் வயப் படுத்திக் கொண்டான் ஜோதி வடிவில் சொக்கிய சோமு.

*சோமு:—நைரஞ்சரா எனும் பால்குனி நதிக்கரையிலுள்ள போதி விருக்ஷத்தடியில் நாற்பத்தைந்து வயதுள்ள, ஓர் உத்தம மானிட தேகமமைந்த, புருஷோத்தமர் விளங்குகின்றனர். அவர் யார்? அவரே கருணைக்குப் பாத்திரம்! அன்புக்கு அணிகலம்! செயலுக்கு அரண்! சாந்திக்கு ஆசனம்! கஷ்ட நிவாரணத்துக்குத் தக்க ஔஷதம். அவரே மாயாதேவிக்கு மதலையாய் வந்தவர். சுத்தோதன மன்னனுக்கு சுதனாய் ஜனித்தவர். சித்தார்த்தரே ஆங்கமர்ந்த ஜோதி. உடனே ஆன்ம விளக்கத்தைக் கண்டார். அக்கணம் "புத்தர்" என்ற ஆசிரமப்பெயர் பெற்றார். இங்ஙனம் அவர் கண்ட ஆன்மஞானமே ஜோதிஸ்வரூபமே புத்த சமயமாகும். இவற்றை உலகுக்கு நன்கு விளக்கிக் காண்பித்தார். ஏழை மக்களின் வறுமைப்பிணியை நீத்தார். உலகின்கண் அநேக நன்மைகளை ஈந்து உளங் களித்தார்.*

*இவருடைய உயரிய தியாகத்துக்கு எதை நாம் ஒப்பிடலாம்? இன்றும் அன்னவர் புகழ் திருமேனி அன்பு வெள்ளம், நம் மனக்கண் முன் பிரதி பிம்பிக்கின்றன. ஞானவொளியை வீசிக் கொண்டிருக்கின்றன. இலங்காநகரில் அநேக பாஞ்சாலைகளில் (பௌத்தமத ஆலயங்களில்) இப் பகவானது ஞாபகார்த்தமான உருவச்சிலைகள், பார்ப்பவர் மனத்தை பக்தியில் நாட்டி பரவசமடையச் செய்கின்றன.*

*பகவான் புத்தர் போதிய நன்மார்க்கத்தையே, தற்காலம் உலகம் போற்றும் உத்தமன் மகாத்மா காந்தியடிகள் கடைப்பிடித்தொழுகி பூவிற் பெரும்புகழை நாட்டியுளாரெனலாம். புத்தபகவானே புனர்ஜன்மமாக, காந்தியடிகள் என்ற நாமம் பெற்று விளங்குகின்றாரெனவும், யூகிக்கக் கூடியதாயிருக்கிறதல்லவா?*

*சோமு முதலிய யாவரும், தமதில்லம் வந்தனர். பொறுமையோடு கேட்டுக்கொண்டு வந்த செல்வன் கொஞ்சிய சிரிப்போடு லீலாவிடமிருந்து தந்தையை அணுகினன். சோமுவும் அன்போடு மணியை வாங்கி முத்தமிட்டான். உடனே மணியின் கனிவாயினின்று அம்புலிப்பாட்டு களித்து வடிந்தது. இக் கனியின் ரசம் எவ்வளவு அருந்திடினும் தெவிட்டாததே.*

*புத்தபகவானின் பொருளைப் பெற்ற பக்தர்களில், மணிமேகலை என்ற பெண்மணியின் பக்தியின் சிறப்பும், மிகப் பெருமை வாய்ந்ததாகும். ஜீவகாருண்யமும், பரோபகாரமுமே உருவென வந்த இவ்வொளியை எம்மதத்தினரும் உண்மையான, உள்ளன்போடு வணங்கி அன்னவர் திருவருளைப் பெறுவதில் மனம் மாறலாகாதென்பதே நமது முழு நம்பிக்கை.*

**ஸ்ரீ பகவான் புத்தர் பதமலர் வாழ்க.**

---

# ஔவையின் ஆசி

[எம். முத்துகிருஷ்ணன்]

'கலீ' ரென்ற சிரிப்பொலி. சுற்று முற்றும் பார்த்தால் ஒன்றுமே காணோம். அமானுஷ்யமான ஒரு எளனச் சிரிப்பு; அவ்வளவு தான்...........

உணர்ச்சித் திரைகள் மோதி ஒலிக்கும் ஞானக் கடலில் அருள் வேட்கையுடன் பாய்ந்து முத்துக் குளிக்கும் அறிஞனொருவனுக்கு மட்டும் வெகு சுலுவில் அது படும்.

ஆம்! இலக்கிய ஆழத்திலிருந்து தான் வருகிறது அக் கள்ளச் சிரிப்பு. அடடா! அதன் அடிவான எழில் கடையில் எவ்வளவு முத்தம்; வைரம்; வைடூரியம்: யாவும் அஞ்ஞான மகற்றும் சுடரொளிகள்!

ஒரே ஒரு மூலை. மங்களகரமான புனித புறநானூற்று அகல் விளக்கின் மங்கிய தெய்வீக ஒளியின் சிறு அசைப்பு. அதோ! அதோ! உலகிருள் மெதுவாய் நகருகிறது. அதிலே கலந்துள்ள 'பொதுவியல்'—திணையென்னும் குளத்தின் 'பொருண்மொழிக்காஞ்சி'த் துறையின் நட்ட நடுவே நின்று கொண்டு தன் வீரிய கரங்களைக் கொட்டிக் கொட்டி பரிகசித்து, எக்காளச் சிரிப்பை அள்ளி வீசுகிறாள் நம் பாட்டி, ஔவை.

........எதைப் பற்றி இருக்கும் இக் கிழவியின் எள்ள நகை?......

"ஹ! ஹ! ஹா!......போர! கொஞ்சம் இமையைத் திற! உன்னைப் பிடித்திருக்கும் அறியாமைத் தார்களை யுதிர்த்து விட்டு, ஞான வொளியை வந்து பாரப்பா, சற்று!"

ஔவையின் இந்த பரிகசிப்பிற்கு ஆளாக வேண்டியதுதான் நாம். அஞ்ஞானக் கோட்டையின் வெளிரிய பிதற்றலில் அமிழ்ந்து கிடக்கும் நம்மை, கலை வாயிலில் நின்று கூவி அழைக்கிறாள் மலர் வதனத்தோடு. அவளின் அழைப்பு ஆலிங்கனத்தில் ஒன்றாகக் கலக்க, நம் மௌட்டியக் கோட்டையைத் தகர்த்தெறிந்து அம்மை யிடத்தான் சற்று போவோமே!

அதோ! அவள் சொல்லுகிறாள்:

"மனிதனே! உன் ஞானம் துருப்பிடித்து விட்டது."

காரணம் என்ன இருக்கும்?

சாதாரணமாக நாம் பிரயாணம் செய்கிறோம். மிகுந்த வந்த அசதி. அண்மையிலொரு நகர். அதற்குள் நுழைந்து ஒரு சத்திரத்தில் போய், அப்பா! என்று படுத்து விடுகிறோம். ஸ்மரணை யற்ற நல்ல அலுப்பு. விடிந்து எழுந்ததும் மடியைத் தடவினால்......பணப் பை கயா! உடனே நாக்கை மடித்து ஆத்திரமாய்க் கத்த ஆரம்பித்து விடுகிறோம், "திருட்டுப் பயல் யார்."

காட்டு வழி சென்றுகொண்டிருக்கிறோம். உச்சி வேளை. அபார பசி. எதிரே சில வேடுவர்கள் மா விளைச்சிலை வாட்டுகிறார்கள். நம்மைக்

கண்டதும் ஓடோடியும் வந்து, உபசரித்து, உண்ணச் செய்கிறார்கள். நம்மையு மறியாமல் நமது குமுத வாய் புகழத் தொடங்குகிறது, "கருணைக் காடு இது," என.

வாணிபஞ் செய்யச் செல்லுகிறோம். நடுவழி. கொள்ளைக் கூட்டத்தாரால் பிடிக்கப்பட்டு ஒரு பள்ளத் தாக்கிற்குள் அடைக்கப் படுகிறோம். அங்கு நம்மைப் போலவே வேறொருவர். கள்வர் தலைவன் கத்திகொண்டு அவரை அணுகுகிறான். அவர் மடியி லிருந்த பணத்தைப் பறித்ததும் 'சதக்' கென்று வெட்டிப் போட்டு விடுகிறான், தலை வேறு முண்டம் வேறாக. பயங்கரமான இந்தக் காட்சியால் நம துள்ளம் நடு நடுங்கி, "பழிகாரப் பள்ளத் தாக்கு" என் றலறுகிறது.

ஒரு மலை. வானை முத்தமிடும் உயரம். காட்டிலாக்காவில் நமக்கு வேலை. மலை யுச்சியிலுள்ள காட்டில் வேவு பார்த்துக்கொண்டு வரும்போது, ஒரு புலி நம்மைப் புசிக்க பதி போட்டுக்கொண் டிருக்கிறது. இதைக் கண்ணுற்ற ஒரு மலைவாசி ஒரே அம்பினால் அதைக் கொன்று நம்மையும் காப்பாற்றி விடுகிறான். அத் தருணத்தில நன்றி யறிதலாக நம் மனம் "மாண்பு மிக்க மலை நாடு" எனப் பாராட்டுகிறது.

ஒவ்வொரு காலங்களிலும், நிகழ்ச்சிகளிலும் மனிதன், தான் அநுபவிக்கும் இன்ப துன்பங்களுக் கேற்ப விதவிதமாய் ஆற்றி விடுகிறான். உண்மை புலப்படுவதில்லை. இதைத்தான் ஔவையும் வர்ஜிதம் செய்கிறாள்.

"நாடு ஆக, ஒன்றோ; காடு ஆக, ஒன்றோ
அல்லது
அவல் ஆக ஒன்றோ; மிசை ஆக, ஒன்றோ"

எவ்வித மிருந்தாலும்,

நாம் இன்ப முறும் போது, ஓரிடத்தை 'நல்ல நில' மென்றும், துன்பமுறும் போது 'கெட்ட நில' மென்றும் அதைச் சொல்லுகிறோம். இது தவறு.

ஏனெனில்,

"எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை."

எவ்விடத்தில் நல்லோர் உறைகிறார்களோ, அவ்விடம் 'நல்லூர்' ஆகி விடுகிறது. எங்கு தீயோர் வதிகிறார்களோ அங்கு தீய நிலம்.

ஒருவேளை நல்ல நிலமாய் இருந்தால் கூட அங்கு தீயோர் வசித்தால், அது கொடிய பூமியாக மாறுகிறது.

இதிலிருந்து 'ஒரு தேசம் தன்னிடம் வாழ்வோரின் பண்பைக் கொண்டதே யல்லாமல் தனக்கென ஓரியல்பு உடையதன்று' எனும் நீதி வெள்ளிடை மலையாய் விட்டது.

ஆதலின், ஔவை கூறுகிறாள், "மக்களே நல்லவர்களாய் இருங்கள். அப்பொழுது தான் உங்கள் நாடு நல்லதாக ஆகும்." அவ்வாறு நாட்டின்

மதிப்பைக் காக்கும் ஒவ்வொரு வீரனுக்கும் தனது முதிர்ந்த "ஆசியை" கொடுக்க, தானே முன் வந்து விடுகிறாள். இதோ! நிலத்தை வாழ்த்துவது போல, நிலத்தில் வசிக்கும் வீரமக்களை ஆசீர்வதிக்கிறாள் :

"வாழிய ! நிலனே !"

முதியவளின் இந்த வரப்பிரசாத ஆசி ஒவ்வொரு இந்தியக் குரிசிலுக்கும் அத்தியாவசிய மன்றோ? இன்று முதல் ஆச்சியின் உபதேசத்தைக் கடைப் பிடிப்போம்! அவள் கூறிய பொன் மொழிகளைப் பாடிப் பாடி நல்லோராவோம்! அப்படியே நமது தேசத்தையும் முன்னணியில் கொண்டு வந்து நிறுத்துவோமே!!!

"நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே."

[ஒன்றோ=எண்ணிடைச் சொல்; அவல்=பள்ளம்; மிசை=மேடு. எவ்வழி=எவ்விடத்தில்; ஆடவர்=பொருள் ஆண்களைக் குறித்தாலும், ஆண் பெண் இருவருக்கும் பொது. பெண்களைவிட ஆண்கள் சிறப்புடைமை பற்றி, சிறப்பையே முதலில் கூறிவிட்டார்.]

---

## கட்டுரையாளர் கவனிக்க.

கட்டுரையாளர் தாங்கள் எழுதும் கதை கட்டுரைகளைப் புக் போஸ்டில் அனுப்பும்போது, ஸ்டாம்பைக் கவரின்மீது சரியாக ஒட்டி அனுப்பவேண்டும். தபால் அதிகாரிகள் கட்டுரைகளைப் பரிசோதிப்பதற்குச் சௌகரியமாக இருக்கும்படி கவரை ஒட்டவேண்டும். 'ஆனந்த'னுக்கு வியாசம் அனுப்பும் நேயர்களில் பலர் கவரில் பாதியும் கட்டுரை யெழுதியுள்ள காகிதத்தின்மீது பாதியுமாக ஸ்டாம்பை யொட்டி அனுப்புகிறார்கள். மற்றுஞ் சிலர் கவரை மூடியும், அதன்மீது கயிற்றைக் கட்டியும் அனுப்புகிறார்கள். இது தற்போதைய தபாற் சட்டத்திற்கே விரோதமான தாகையால், மேற்குறித்த விதமாகவுள்ள கவர்களுக்கு இரட்டிப்பாகத் தபாற் கட்டணம் வாங்கிவிடுகிறார்கள். இதனால் நமக்கு கஷ்டமும் நஷ்டமும் ஏற்படுகிறது. இதையெல்லாம் கவனித்துக் கட்டுரையாளர் நடந்துகொள்ள வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறோம்.

பத்திராதிபர்.



# குழந்தைக் கல்வி

('கார்த்திகேயன்.)

என நன்புமிக்க கோமளா!

சென்ற முறை சிறுவர்களது உடற்பயிற்சியின் முக்கியத்தை விவரித்தேன் அல்லவா! இனி அவர்களது மனோ பயிற்சி முறைகளிற் சிலவற்றைக் கூறுகிறேன்.

உடற்பயிற்சிக்குப் பிறகு இளைஞர்களது உள்ளத்தைப் பண்படுத்த வேண்டும். குழந்தைகள் மனம் கண்ணாடி போன்றன. மிகத் தெளிவான கபடமற்ற உள்ளம். அந்தப் பரிசுத்தமான உள்ளத்திலே நாம் முதன் முதல் கற்பிக்க வேண்டியது மரியாதையும், இரக்கமுமாம்.

மரியாதையுடன் நடந்துகொள்ளுதல், எளியார்க்கு இரங்கல் என்ற இவ்விரு பண்புகளும் குழந்தைகளுக்குப் புத்தம் புதியன என்று கூறுவது பொருந்தாது. மனித உள்ளத்திலே இயல்பாகவே இவை விதைக்கப்பட்டுள்ளன. விதைகளிலுள்ள முளைகளைப்போல உறங்கிக் கிடக்கின்றன. காற்றும் நீரும் கொண்டு அம்முளைகள் எவ்வாறு விதைகளினின்றும் தோன்றுகின்றனவோ அவ்வாறே இச்சிறிய குணங்களும் அறிவுச் சுடர் கொண்டு செழுமையுற்று வெளிவரல் வேண்டும்.

பெரியோர்களைக் கண்டால் எழுந்து நிற்கவேண்டும். அவர்களுக்கெதிரில் பணிவுடன் நடந்து கொள்ளவேண்டும், நூல்கள், புத்தகங்கள் இவற்றில் கால்படலாகாது. ஆசிரியன்மார்கள், சந்நியாசிகள் இவர்கள்பால் பயபக்தியுடன் நடந்து கொள்ளவேண்டும்—இப்பழக்கங்களெல்லாம் பெரும்பாலும் குழந்தைகளுக்கு இயல்பாகவே வந்து விடவில்லையா? குழந்தைத் தன்மைகளில் ஒன்று தானும் மற்றவர்களைப்போல நடக்க முயல்வது. இந்தப் பெற்றியால் அது வெகு விரைவில் தன் பெற்றோர்களும், மற்றோர்களும் நடக்கும் முறைகளை புணர்ந்து அவ்வாறு தானும் நடக்க விரும்புகின்றது. ஆலயஞ் சென்றால் இறைவனை வணங்கவேண்டும் என்று நாம் சொல்லு முன்பே, நம்மைப்போல அதுவும் கடவுள் சந்நிதியில் தண்டனிட்டு கரங் குவித்து வணங்குகின்றதன்றோ!

ஆசிரியர்கள் பால் இளைஞர்கள் நடந்து கொள்ளும் முறையில் மரியாதைத் தன்மையை அதிகம் காணலாம். ஆசிரியர்களிடத்தில் சிறுவர்களுக்குத்தான் என்ன அன்பு! அதே சமயத்தில் விவரிக்க முடியாத ஏதோ ஒரு அச்சம்! இதெல்லாம் அவர்களுக்கு எப்படியோ வந்து விடுகின்றனவன்றோ! ஆசிரியர் தங்களைக் காட்டிலும் மிகவும் படித்தவர், அதிகம் தெரிந்தவர் என்ற மதிப்பும் அவரது உயரிய ஒழுக்கமும் ஓரளவு காரணமாம். சிறு குழந்தைகளுக்குத் தங்கள் ஆசிரியர் சொல்லில் மட்டற்ற நம்பிக்கை. "எங்கள் சார்

இப்படித்தான் சொன்னார்" என்று அவர்கள் கூறும்போது அதில் அவர்களது ஆணித்தரமான நம்பிக்கையைக் காணலாம்.

சில பிடிவாதமான குழந்தைகள் தங்கள் பெற்றோர்கள் எவ்வளவு தடுத்தும் கேளாது தங்கள் மனம்போன போக்கில் திரிவர்; துடுக்கான செயல்கள் பல புரிவர். இத் தகையோரை இனிமை கூறி அழைத்து வைத்துக்கொண்டு கதைகள் மூலமாகவோ, அல்லது துஷ்டத்தனத்தால் சிலர் படுந் துன்பங்களைக் காட்டியோ திருத்தவேண்டும். அப்போது அவர்கள் தங்கள் எளிமையையும், அனுபவமின்மையையும் உணர்ந்து 'மூத்தோர் சொல் அமிர்தம்' எனக் கடைப்பிடிப்பர். இவ் வண்ணம் பெரியோரிடத்து மரியாதையுடன் பழகும் தன்மையை இளமையிலேயே வளர்க்கவேண்டும்.

அடுத்தாற்போல் இளஞ்சிறார்க்குப் பயிற்றப்படுவது இரக்கமாகும். முன்னே சொல்லியதைப்போல இரக்கம் என்ற சீர்மை குழந்தையுள்ளத்து இயற்கையாக விதைக்கப்பட்டுள்ளது. எந்த மனித வுள்ளத்தும் இரக்கமற்ற தன்மை இருக்க முடியாது. அப்படி ஒரு நெஞ்சம் உண்டு என்றால் அது மிருக வினத்தைச் சேர்ந்ததாகத்தா னிருக்கவேண்டும்.

கோழைத்தனம் காரணமாக மனிதன் இரக்கம் கொள்ளுவானானால் அது மிக ஈனமானதே! எதிரி தன்னிலும் மிக்கான் என்றுணர்ந்து அவன்பால் கருணை பாராட்டுவதாக ஒருவன் உரைப்பானானால், உலகம் அவனைப் 'பயந்தாங்கொள்ளியாக'வே மதிக்கும். அவன் அதைரியத்தைக் கண்டு எள்ளி நகையாடும். ஆதலால் காருண்யம், இரக்கம் என்ற மனோபாவமெல்லாம் தன்னினும் எளியர்பால் கொள்ளலே உயரியது.

தோழி! சிறு பிராணிகளான ஈ, எறும்பு, சிலந்திப்பூச்சி முதலியவற்றை எடுத்துக்கொள். இவற்றைத் துன்புறுத்தவோ, அழித்து நாசம் செய்யவோ சிறுவர்களால் கூடும். பல்லி, ஓணான், வண்டு, கோழி முதலானவெல்லாம் சிறுவர்களது துன்பத்துக்கு மிக எளிதில் உட்படலாம். ஆதலால், அப் பிராணிகளது எளிமையை நன்குணர்த்தி அவற்றின் மீது அன்புகாட்டும்படி சிறுவர்களுக்கு நற்புத்தி புகட்டவேண்டும். அவ்வாறே எளிய மக்கள், வயோதிகர், நோயாளிகள் இவர்கள் மாட்டும் சிறுவர்கள் கருணை காட்டவேண்டும் என்று எடுத்துரைப்பது ஏற்றதாகும். இப்படிச் செய்வதால் பிச்சைக்காரர்களையும், பிணியாளர்களையும் காணின் ஏளனஞ் செய்யும் சில சிறுவர்களது துர்ப்பழக்கம் நீங்கும். அல்லாமலும் அவதிப்படும் மக்களுக்குத் தங்களாலான உதவி செய்யவேண்டும் என்ற ஆசையும் அவர்களுக்கு உண்டாகும்.

நல்லது. கோமளா! விளக்கேற்றும் நேரமாய் விட்டது. வேலையோ மெத்த கிடக்கின்றது. இன்னொருமுறை தொடர்ந்து வரைகிறேன்.

உனது அன்புள்ள
சிவகாமி.

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")

(சென்ற இதழின் தொடர்ச்சி.)

## ஆசிரம வாசிகள் உணவுத் திட்டம்

ஆசிரம உணவு விடுதியில் உள்ள உணவு முறையைச் சற்று விளக்குகிறேன். வாசகர்காள்! அச்சத்தால் படிக்காமல் விட்டுவிடாதீர்கள். உங்களை யான் சாப்பிடச் சொல்லிக் கட்டாயப்படுத்தி தொல்லை செய்ய மாட்டேன். அங்கு யந்திரத்தால் அரைத்த அரிசிதான் சமைக்கப்படுகிறது. கோதுமை ரொட்டியும் உண்டு. பாசிப் பயிற்றைப் உப்பில்லாமல் வேக வைத்து வைக்கப்படுகிறது. ஏதாவதொரு காயும் வேக வைத்து அளிக்கப்படுகிறது. ஆனால் எதிலும் உப்பு, காரம், புளி ஆகிய பொருள்கள் கனவிலும் காண முடியாது. நெய் கலந்துகொள்ள ஆசிரமத்தில் விதி இடந்தராது. நெய்யின் இடத்தை வகித்து ஆட்சிபுரிவது ஆளி விதை யெண்ணெய் ஆகும். சில சமயங்கள் வெங்காயத்தான், சீமைத் தக்காளி, முள்ளங்கி, வெள்ளரிக்காய் ஆகியவை பச்சையாகவே பரிமாறப் படுகின்றன. பாலும் உண்டு; ஆனால், வேண்டுவோர் அதற்காக தனிக் கட்டணம் செலுத்த வேண்டும். இவையே ஆசிரம உணவு வகைகளில் அடங்கியவை. இவையெல்லாம் இயற்கையோடு இசைந்த வாழ்வுக்கு ஒத்ததுதான் என்பதை அறிஞரெல்லாம் ஒப்புகின்றனர். ஆனால் உப்பு, புளி, காரத்தில் ஊறி ஊறப்பட்ட தமிழன் எங்ஙனம் ஒப்புவான்? எனவே, நான் ஆசிரம உணவு விடுதியி லிருந்து பிய்த்துக்கொண்டு ஓடவேண்டியதாயிற்று.

இது, என்னை ஆசிரம வாழ்வுக்குத் தகுதியற்றவன் என்று காட்டிக் கொண்டதாகும்.

## தக்ளிப் பயிற்சி

வினோபாஜி எப்போதும் தக்ளிப் பித்து கொண்டவர். இராட்டையை விடத் தக்ளியே தான், கிராம மக்கள் சொற்பச் செலவில், எளிதில் பெறக் கூடியது என்று அவர் கருதுகிறார். யான் தக்ளிப் பயிற்சி தொடங்கி விட்டேன். முதலில், எனக்கு வேண்டிய பஞ்சை, கொட்டிப் பட்டை போட்டதாகவே வாங்க வேண்டி நேர்ந்தது. யாதக்கெனின், எனக்குத் தேவையான பஞ்சை, கொட்டிப் பட்டை போடும் பயிற்சி கடுகளவும் கிடையாது. பன்னிரண்டு நாட்கள் தக்ளிப் பயின்றேன். அதற்குள், சாதாரணமாக நூற்போரின் வேகத்தில் 50-வீத வேகத்தையடைந்தேன். அதாவது மணிக்குச் சுமார் 150-கெஜம் நூற்கலானேன். நூலின் நம்பரும் 8-லிருந்து 10-வரையிருந்தது. ஆனால் தக்ளியில் என் மனம் சென்றபாடில்லை. இராட்டைப் பழக்கத்திற்குத் தான் துடியாய்த் துடித்தேன். ஆயினும் என்ன பயன்? ஆசிரமத்தில் இராட்டை பயில விரும்புவார், அதைப் பயிலு முன், குறைந்த பட்சம் ஒரு மாத மாயினும் தக்ளி பழக வேண்டுமென்று விதியுளது. எனவே, யானும் விருப்பின்றியே தக்ளியைச் சுற்றிக் கொண்டிருந்தேன்.

## இராட்டைப் பயிற்சி

பிறகு இராட்டைப் பயிற்சி தொடங்கினேன். அதற்காக வென்று இருந்த ஆசிரியர், அருகிருந்து முக்கிய நுணுக்கங்களையெல்லாம் தெரிவித்தார். இராட்டை தொடங்கிய மூன்றாம் வாரத்திலேயே இரண்டு சிட்டங்கள் நூற்கலானேன். சிட்ட மென்பது 853-கெஜம் கொண்ட ஒரு குச்சமாகும். யான் ஆசிரமத்தி லிருந்து வெளியேறியபோது நாளொன்றுக்கு 3½-சிட்டம் நூற்றேன்.

## பஞ்சு கொட்டலும் பட்டை போடலும்

யான் ராட்டை பழகத் தொடங்கிய போதே பஞ்சு கொட்டவும், பட்டை போடவும் பழக வேண்டுமென்று அவாவினேன். பயிர்த் தொழிலுக்கு உழவும் எருவும் எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் பஞ்சு கொட்டலும், பட்டை போடலும், இராட்டை பயில்வோருக்கு. ஒருவர், எவ்வளவு திறம்பட நூற்பவராயினும், சேர்த்தியாய்க் கொட்டிய பஞ்சை அழுத்தமாய்ப் பட்டை போட வில்லையாயின் அவர் நூற்கும் திறன் அவ்வளவும் பயன்படாது பாழ்படும். இவ்வுண்மையை யான் அங்கு அநுபவத்தில் அறிந்தே னாதலால், அதைப் பழகுவது இராட்டை பழகுவோரின் முன்னணிப் பயிற்சியென்று தீர்மானித்துப் பழகி வரலானேன்.

பஞ்சு கொட்ட லென்பது நுணுக்கமான வோர் கலையென்று கூறுவது பொருந்தும். அது உடம்புக்குச் சோர்வையும், களைப்பையும் உண்டு பண்ணும் ஓர் பாடு மாகும். இதிலுள்ள நுணுக்கங்களை விளக்கி ஓர் புத்தக மெழுதினால் தான், அதைப் பற்றி முழுதும் கூறியதாகும். இவ்வளவு பாடுடைய வொன்றை, என்னுடைய இராட்டைப் பயிற்சியுடன் இரண்டே மாதத்தில் சேர்த்துப் பயிலத் தீர்மானித்தது, என்னுடைய பேராசையைத்தான் காட்டுகிறது. என்றாலும் என்னாசை பயனளித்தது. பஞ்சு கொட்டலை நான் பூரணமாகப் பயின்று கொண்டேன். என்னைப் போன்று பஞ்சு கொட்டிப் பட்டை போடும் வேலையை நன்றாய் அறிந்திருந்தவர், ஆசிரமத்தில் பயிற்சி பெற்றோரில் மிகச் சிலரென்றே கருதுகிறேன். இது, என் முயற்சியால் பெற்ற பலன் என்று பெருமை யடையாமல் இருக்க முடியுமா?

## ஆசிரமமும் அதன் குறிக்கோளும்

ஆசிரமத்தைச் சேர்ந்த குடில்களெல்லாம் வரிசை வரிசையாய் அமைந்திருப்பதாய் முன்பே கூறி யுள்ளேன். அவைகளில் பலவற்றில் ஆசிரம வாசிகளே வசிக்கின்றனர், ஒவ்வொரு கொட்டகையையும் பல அறைகளாய்த் தடுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு அறையிலும் ஒருவர் அல்லது இருவர் வசிக்கின்றனர். ஆசிரமத்திற்கு வருமுன் அவர்களில் பெரும்பாலோர் ஆடம்பர வாழ்வில் திளைந்திருந்தவர்கள். ஆனால், ஆசிரமத்தை யடைந்தவுடன் அவர்கள் தேவை மிகக் குறைந்து விடுகிறது. அவர்கள், நாட்டை அடிமைத் தனத்தில் இருந்து விடுவிக்க, துணிவு மிக்க வீரர்களாகின்றனர். அதற்கான மனோநிலையைத்தான் ஆசிரமம் வளர்க்கிறது.

ஆசிரமவாசிகளின் தேவை மிகக் குறைவு. ஒரு அறையிற் சென்று பார்த்தால் ஒரு இராட்டை, ஒரு பஞ்சு கொட்டும் வில், இரண்டு தக்ளி

கள், சில புத்தகங்கள், ஒரு வாளி, ஒரு விளக்கு, ஒரு கயிற்றுக் கட்டில் ஆகிய இவையே காணும். ஆசிரமத்தில் சிறப்பான கொள்கை அஹிம்சை, சத்தியம், பிரமச்சரியம், சுவை யடக்கல், தீண்டாமை விலக்கு, நூற்றல், ஆகியவை. இவற்றிற்கெல்லாம் சிகரம் வைத்தது போன்றிருப்பது, எல்லோரும் உடம்பைச் சோம்ப விடாது எறும்பு, தேனீக்களைப் போன்று எப்போதும் தொழில் புரிவது."

ஆ! எவ்வளவு உன்னதமான இலட்சியம். இத்தகைய அரிய குறிக்கோள்களில் ஊறிப் பழுத்த உள்ளங்கள் கொடுமையான தொல்லைகளைப் பொருட்படுத்தி, மகத்தான இலட்சியத்தை யடைவதில் தோல்வியுறுமோ! எனவே, எதிர்காலத்தில், இந்திய நாடு வீரர்களும், தியாகிகளும், விளையும் புனிதப்பண்ணையாக மிளிரப்போவது உண்மை. அதோடு, உலகத்தின் இன்ப வாழ்விற்கான கல்வியையும் நமது பாரதநாடுதான் கற்பிக்கப் போகிறது.

இப்பெரிய அண்டமுகட்டை முட்டும் இலட்சியத்திற்குத் தோற்றுவாயாக, நிலைக்களனாக அமைக்கப்பட்டிருப்பதுதான் ஆசிரமம். ஆச்சார்ய வினோபாவின் குறிக்கோளும் அதுவே.

இனி, ஆசிரமவாசிகளின் தினசரிப் பணியை விளக்குவது அவசியம்.

## ஆசிரமவாசிகள் தினசரிப் பணி

வைகறை 4-மணி. இயற்கை யனைத்தும் இறைவர் தொட்டிலில் கண் வளர்கின்றது. ஆசிரமத்து மணி மெல்ல அசைந்து ஆசிரமவாசிகட்குத் திருப்பள்ளி யெழுச்சி பாடுகின்றது. ஆடவரும், மகளிரும் உறக்கம் நீத்து ஆசிரமத்து நடுவிலுள்ள வெளியில் கூடுகின்றனர். கடவுள் வணக்கத்திற்கான தோத்திரப் பாடல்கள் பாடப்படுகின்றன. பிறகு,

"அஹிம்ஸா சத்தியஸ்தேயோ
பிரம்மச்சரிய அசங்க்ரஹ
சரீரஸ்ரம ஸ்வாத
சர்வத்ர பயவர்ஜ்ஜன்
சர்வதர்மி சமானத்வ
சுதேசி ஸ்பரிசபாவன..........."

என்று ஒரு ஸ்லோகத்தை எல்லோரும் உச்சரிக்கின்றனர்.

பிரார்த்தனைக்குப் பின் உடற் பயிற்சிக்கான நேரம். இதில் ஆசிரமம் துப்புரவு செய்கின்றனர். கக்கூசு சுத்தம் செய்கின்றனர். செடிகட்கு நீர் வார்க்கின்றனர். முதியோர் உலவச் செல்கின்றனர். சிலர் ஆசனம் போடுகின்றனர். பிராணாயாமம் ஆகியவும் பழகுகின்றனர். இவ்வாறு காலை 6-மணி வரையும் கழிகின்றது.

உடற் பயிற்சி யானதும் நீராடல், காலை யுணவு தயாரித்தல், உண்ணல் ஆகிய வெல்லாம் முடிய 7-மணி யாகும். ஆகவே, எல்லோரும் அவரவர்கள் தொழில் மேற் செல்லுவர். ஆசிரமத்தில் உள்ள வேலைகளில் பஞ்சு கொட்டல், நூற்றல், நெசவு, சாயம் தோய்த்தல், நெய்த துணிகட்கு

அச்சப்பூ அடித்தல் ஆகிய இவையே முக்கியமானவை. தச்சு, கொல்லன் பட்டறைகளும் உள.

நண்பகல் உணவிற்காக 12-மணிக்கு மறுபடியும் மணி யடிக்கிறது. உண்ணலும், ஓய்வுமாக ஒன்றரை மணி நேரம் கழிந்ததும், எல்லோரும் பிற்பகல் வேலைக்குச் செல்லு முன் நூற்கும் கூடத்தில் குழுமி தக்ளியில் நூற்கவேண்டும். இந்த நேரத்தில் நூற்பதானது ஒரு வேள்வி யென்றே கருதப்படுவதால், இதில் கலந்துகொள்ளத் தவறும் ஆசிரமவாசிகள், தக்க காரணம் காட்டக் கடமைப்பட்டுள்ளார்கள். இல்லையேல் அவர்கள் மீது நடவடிக்கை யெடுத்துக்கொள்ள ஆசிரமவிதி இடந் தருகிறது.

மறுபடியும் பிற்பகல் 2-மணியிலிருந்து மாலை 5-மணிவரை அவரவர்க்குரிய வேலை. பிறகு விடுதிகட்குத் திரும்புகின்றனர். வார்தா வட்டாரங்களில் எல்லா விடங்களிலும் மாலை $5\frac{1}{2}$-மணிக்கே இரவு உண்டி முடிந்து விடுகிறது. பிறகு, எல்லோரும் உல்லாசமாகப் பொழுது போக்குகின்றனர். விஷயங்களை விவாதித்தல், செய்தித்தாள் படித்தல், கலை நூல்கள் பயிலல் ஆகியவும் இந்நேரத்தில்தான். இரவு $8\frac{1}{2}$-மணி யானதும் இரவு வணக்கம் செய்யக் குழுமுகின்றனர். பிரார்த்தனை யானதும் ஆசிரமத்துக்கான திட்டங்கள், மற்றப் பொது விஷயங்கள் ஆக ஏதேனு மிருந்தால் கலந்து யோசித்து முடிவு செய்கின்றனர். பிறகு எல்லோரும் தங்கள் வாய்களுக்கு மௌன முத்திரை வைத்துக்கொண்டு பிரிகின்றனர். பிறகு ஆசிரமத்தில் மௌனம் ஆட்சி செய்கிறது. இரவு நேரத்தில் என்ன நேரினும் சமிக்கையின மூலம் தான் ஒருவர்க் கொருவர் அறிவித்துக் கொள்ள வேண்டும். மௌன முத்திரையை மாற்றக் கூடாது. வைகறைப் பிரார்த்தனையில் தான் அந்த மௌனம் கலையும்.

## இராட்டை தயாரிப்பு

நால்வாடி ஆசிரமத்தில் ஆறுவிதமான இராட்டைகள் தயாராகின்றன. அங்கு தயாராகும் இராட்டைகள் பாரத நாட்டிலே மிக உயர்ந்த வகைகளாகும். மாதந்தோறும் நூற்றுக்கணக்கான இராட்டைகள் செய்து நாட்டின் பல பாகங்களுக்கும் அனுப்பப்படுகின்றன.

## பால் பண்ணை

ஆசிரமத்தைச் சேர்ந்த பால் பண்ணை யொன்று இருக்கிறது. அதிலிருந்து வார்தா வட்டாரங்களிலுள்ள எல்லாக் கழகங்களுக்கும் கலப்பற்ற பாலும், வெண்ணெயும் கொடுக்கப்படுகிறது. பால், உணவுப் பொருள்களில் முக்கிய இடம் பெற்றிருப்பதை அங்கு அடிக்கடி கூறப்படுகிறது. ஒவ்வொரு ஏழைக் குடியானவனும் ஒரு பசு வைத்து, பாலுண்ண வேண்டுமென்று கருதப்படுகிறது.

## ஒரு தாய் மக்கள்

நான் அங்கிருந்த இரண்டு தினங்களில் எல்லோரிடத்தும் நன்கு பழகினேன். அவர்கள் எல்லோரும் எந்த மாகாணத்தாரா யிருப்பினும்; எம் மதத்தரா யினும் "நாமெல்லாம் ஒரு தாய் மக்கள்; நாமெல்லாம் பாரதத் தாய் மக்கள்" என்று சொல்லுகின்றார்கள்.

(தொடரும்.)

# பைசாசம் கட்டிய கட்டடம்

(மதியழகன்.)

ஒரு கிராமம். இயற்கையன்னை ஆட்சி புரியும் நல்கிராமம், அங்கு வசிக்கும் மக்களிற் சிலர் கல்வித்திறம் படைத்தோர். வேறு சிலர் சாஸ்திர முணர்ந்தோர். மற்றும் பலர் உயர்ந்த கலைகளை ஆய்ந்தோர். இவர்கள் மிகுந்த சுதந்திரத்துடன் வாழுகின்றவராயினும், பாதிரியாரின் வாக்கைத் தேவவாக்காகக் கருதி ஒழுகுபவர்.

கல்வி கற்று, கலைகளை ஆய்ந்து, சிற்றின்பம் விடுத்து, மக்கள் நலன் கருதும் பாதிரியாருக்குப் பெரிய கோவில் கட்ட வேண்டுமென்ற நல்லெண்ணம் உதித்தது. கூட்டினார் மக்களை. வெளிப்படுத்தினார் தன் எண்ணத்தை. ஏற்றனர் கிராம மக்கள். கொடுத்தனர் பல வெள்ளைக்காசுகள் (ரூபாய்). வசூலித்த நிதிகொண்டு கட்டடமும் துவக்கப்பட்டது. ஆனால் முற்றுப் பெறவில்லை. காரணம் என்ன? அன்புள்ளம் நிறைந்த நமது பாதிரியார் தமது சிற்றின்பக் கேளிக்கைக்கு நிதியை உதவியாகக் கொண்டிருப்பாரோ? சே! நன்னோக்க முடையாருக்குத் தீயெண்ணமும் வந்துறுமோ, என் வீண் அபவாதம்?

மறுமுறையும் நிதி திரட்டப்பட்டது. ஆனால் கட்டடம் முடிந்தபாடில்லை. உடனே கிராமமக்கள் கொண்டனர் சந்தேகம். வெறுத்தனர் பாதிரியாரை. மறுத்தனர் நிதி கொடுக்க. இவர் வசை மொழிகள் காற்றிற் பறந்து வந்து விழுந்தன பாதிரியார் காதுகளில்.

பாதிரியார் கொண்டார் ஏக்கம். தட்டுகிறது முகத்தில் அசடு. மாறி மாறி வருகின்றன பலவித யோசனைகள். அதுகாலை தோன்றினான் அவரு சிஷ்யன் ஒருவன். ஒருவர் வருகையைச் செப்பினான். உள்ளே வரட்டும் என்று ஒலித்தது பாதிரியார் உதடு. நுழைந்தார் ஒரு பெரியார். நீண்டு சுருண்டு கருத்த குஞ்சி. கோர மீசையும் தாடியும், அகன்ற பெருநுதல். விழித்த கருவிழிகள். பயங்கரப் பார்வை. கரத்தில் மந்திரக்கோல் இப்பெரியாரைக் கண்டார் நம் பெரிய பாதிரியார். கிராம மக்களை வசப்படுத்திய உள்ளம் கலங்கிற்று. பலர் தன் காலில் விழுந்து நமஸ்கரிக்கும்படி இயக்கிய சக்தி மறைந்து, அவர் காலில் விழும்படியான கோழைத்தனம் தாண்டவ மாடியது. வந்தவர் ஒரு பைசாசம் என்பதை அவர் மூலம் அறிந்தார். வந்த விவரம் வினவினார். "பாழடைந்த கோவிலைக் கட்டித் தருகிறேன். அதற்குப் பிரதிபலனாக எந்த உயிர் முதலில் உள் நுழைகிறதோ அதனை எனக்குப் பலியாக அளிக்கவேண்டும்" என்று பைசாசம் மொழிந்தது. பாதிரியாரும் ஏற்றார். இதனை கிராம மக்களுக்கும் உரைத்தார்........................

கட்டடம் முடிவடைந்தது. பாதிரியாரும் ஏனை மக்களும் வந்து பார்த்தனர். மகிழ்ச்சி கொண்டனர். ஆனால் உள் நுழைவார் யார்? பலவற்றிற்கும் பாதிரியார் வாக்கைச் சிரமேற் கொண்டொழுகிய மக்கள், இன்று உயிர் விடுவதற்குத் துணிந்து அவர் வாக்கின்படி [illegible] முன் வருவரோ? ஸ்ரீகாருண்யம் நிறைந்த பாதிரியார் யோசிக்கலானார். "ஒருயிர்

வேண்டும் என்றது. ஆனால் மனிதன் உயிர் என்று குறிப்பிடவில்லை. ஆதலால், ஒரு நாயை உள்ளே முதல் அனுப்புவது நலம்'' என்று கருதினார். இந்த எண்ணத்தையும் வெளிப்படுத்தினார்.

ஆ! என்னே கபட உலகம்! நியாயம் என்பது ஒன்றில்லையா? பகுத்தறிவுடைய மனிதர் நீதியின் எல்லையைப் பகுத்தறிய முடியாதோ? ஏ பாதிரியாரே! யோக மகிமையை நன்குணர்ந்த யோக்கியரே! ஜீவகாருண்யப் பெருமை யுணர்த்திய சேசுநாதரின் அடிகளே! உலகத்திற்குத் தொண்டு புரிய வந்த உரவோய்! மக்களுக்கு நல்லறிவு புகட்டவந்த மாண்புடையோய்! மனிதர்க்கெனத் தனி நியாயமுண்டோ? எல்லா உயிருள்ளும் இறைவன் நிறைந்துள்ளான். அவன் யாவற்றையும் உணராமல் போகான். தகுந்த தண்டனையை அளிக்காமல் நில்லான். நியாயமென்பது பொதுச் சட்டம். அதற்குச் சாதி சமயவேற்றுமை யில்லை. நிறவேறுபாடில்லை. உருவ வித்தியாசமில்லை. மனிதனாயினும், விலங்காயினும், புல்லாயினும் மற்றெதுவாயினும் பாரபட்சமின்றி நியாயம் செலுத்த வேண்டும். அறிவுத் திறனும், ஒழுக்க விழுப்பமும் கொண்ட பாதிரியார் ஏன் இதனை யோசிக்கவில்லை? கிராம மக்களின் நன்மைக்காகக் கட்டப்பட்ட கோவிலுக்குக் கிராம மக்களின் நலத்தைக் கருதும் பாதிரியார் ஏன் முதல் பலிக்கு முன்வரக் கூடாது? இத்தொண்டு புரிவரேல் அவர் நன்னிலை யெய்துவர். அநித்தியமாகிய உடல் மேல் அவர் ஆசை வைத்தமையான் அவர் பாதிரியார் என்னும் பெயருக்குத் தகுதியுடையவ ரல்லர். இவர் போன்ற தாடிவைத்த போலிச் சாமியார்களும், அவர் வழிச் சிஷ்யர்களும் இல்லவரேல், நாடு எங்ஙனம் நன்னிலையடைய முடியும்? நல்லோர் வாழ்க. தீயோர் அழிக.

இவ்வித எண்ணங்களெல்லாம் இறக்கப்போகும் நாயின் மனதில் தோன்றலாயின. தோன்றி என் பயன்? ஒரு கூண்டி லடைக்கப்பட்டு கோவிலுள் விடப்பட்டது. நாயைக் கண்டது; பைசாசம். கொண்டது சீற்றம். சுருங்கியது நெற்றி. ஏறியது புருவம். கண்களினின்றும் பறந்தது தீ. நாசியினின்றும் வீசியது புகை. கடித்தது வாயை. துடித்தன உதடுகள். சினத்தால் எட்டி உதைத்தது நாயை. உடலைவிட்டு விண்ணுல கடைந்தது ஏழை நாயின் உயிர். திடீரென இடிந்து விழுந்தது கட்டடம். நித்யானந்த யோக மகிமையை நன்குணர்ந்த பாதிரியார் சென்னிமேல் ஒரு பெருங்கல் பட்டது. இறக்கப் பயந்த பாதிரியாரும் நாயோடு ஒன்றாய்க் கலந்தார்.

ஏழை அழுத கண்ணீர் கூரிய வாளை ஒக்கு மன்றோ! எல்லாம் இன்புற்றிருக்க நினைப்போமாக.

(Victor Hugo எழுதிய ஒரு சிறு பிரஞ்சுக் கதையைத் தழுவியது.)



# "பிராணிகளின் சூழ்ச்சி"

(K. ரங்கநாதன், B. Sc.,)

இப் பூவுலகின் கண்ணே வாழும் எல்லா பிராணிகளும் தாவரங்களும் தத்தமக்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் தாங்களே தேடி, உண்டு களித்து உயிர் வாழும் தன்மை யுடையனவாய் இருக்கின்றன. ஆனால், ஆறு அறிவுகளுடைய மனிதர்களாகிய நம்முள் சிலருக்குத் தாங்களே தம் உணவுப் பொருள்களைத் தேடி, உண்ண வேண்டுமென்ற கவலை ஓர் தினை அளவும் கிடையாது. ஆகையால் இம்மானிடர்களைத் தாவரங்களுக்கும் கீழ்ப்பட்டவர்கள் என்று கூறின் அது மிகை யாகுமோ?

ஆனால் ஒவ்வொரு பிராணியும் தாவரமும் தனக்கு வேண்டிய உணவுப் பொருள்களை நல்ல வழியிலோ அல்லது வஞ்சகமான வழியிலோ அதிக சிரமத்துடன் தேடி, உண்டு உயிர் வாழ்கின்றது.

இப்பொழுது பிராணிகள் தங்கள் உணவை வஞ்சகமான வழியில் எவ்வாறு தேடுகின்றன என்பதை மட்டும் ஈண்டு ஓர் சிறிதளவு ஆராய்வோம்.

நம் வீடுகளில் சிலந்திகள் வலை கட்டி வாழ்கின்றதை நம்மில் ஒருவரும் காணாமலிருக்க முடியவே முடியாது. இச் சிலந்தி எச்சில் போன்ற ஓர் திரவ பதார்த்தத்தை உற்பத்தி செய்யும் தன்மையுடையது. இத்திரவ பதார்த்தம் காற்றில் பட்டவுடன் இறுகி ஓர் மெல்லிய நூல் போன்ற பொருளாக மாறுகிறது. இந்நூல் போன்ற பொருளைக் கொண்டு பெரிய விஞ்ஞானியும் செய்ய வொண்ணாத ஓர் அழகிய வலையைக் கட்டி முடிக்கிறது. வலையைக் கட்டியவுடன் அது அந்த வலையின் நடுவில் மறைந்திருக்கும். தன் வலைக்குள் எதாவது பூச்சிகள் அகப்பட்டது தெரிந்தவுடன் மறைந்து கிடக்கும் இச் சிலந்தி அவற்றின்மீது பாய்ந்து அந்த நூலால் நன்றாக பிணைத்துப் பிறகு அப் பூச்சிகளைக் கொன்று அவற்றின் சாற்றினை உறிஞ்சிவிடும்.

இன்னும் ஓர்வித சிலந்தி வலையைப் பாழடைந்த மண்சுவற்றில் கட்டுகின்றது. இதன் [illegible] மேற்கூறிய சிலந்தியின் வலையைப்போல் அவ்வளவு அழகாக இருக்காது. இது வலையைக் கட்டியவுடன் அருகிலுள்ள ஓர் சிறிய துவாரத்தில் மறைந்திருக்கும். இவ்விதம் இது மறைந்திருப்பது மற்ற பூச்சிகளுக்கு ஓர் சிறிதளவுந் தெரியாது. வலைக்கும் மறைந்திருக்கும் இடத்திற்கும் தொடர்பு இருக்கவேண்டி ஓர் சிறிய நூலை பாலமாக அமைத்துக் கொள்ளுகின்றது. அவ்வலையில் பூச்சிகள் அகப்பட்டது தெரிந்தவுடன் மறைந்திருக்கும் இச்சிலந்தி வெளிவந்து அப் பூச்சிகளைக் கொன்று அவற்றின் சாற்றை உறிஞ்சிவிடும்.

சில காடுகளில் சிரிக்கும் கழுதை என்ற ஒரு மிருகம் இருக்கிறது. (சென்னை மிருக காட்சி சாலையிலும் முன் ஒன்று இருந்தது.) இது சேய்மையின் கண்ணிருந்து கத்தும் பொழுது பலர் ஒன்றுகூடி சம்பாஷித்துக் கொண்டும், சிரித்துக்கொண்டு மிருப்பதைப் போலிருக்குமாம். மனிதர்கள் காட்டிற்கு வந்திருப்பதாக தவறாகக் கருதி "நமக்கு இன்று சரியான வேட்டைதானென்று எண்ணி வரும் மிருகங்களை இக் கழுதை கண்டுவிட்டால் அதற்கு அன்று சரியான வேட்டைதான். இதைப்போல வஞ்சக ஜந்து பறவை இனத்திலும் இல்லாமலில்லை.

ஆஸ்திரேலியா முதலிய இடங்களில் சிரிக்கும் பறவை இருக்கிறதாம். சிரிக்கும் கழுதையைப் போலவே இதுவும் பல பிராணிகளை ஏமாற்றுந் தன்மை உடையது.

சில பிராணிகள் தங்கள் உணவைத் தேடும் பொருட்டுத் தங்கள் நிறங்களையும் உருவமைப்பையும் மாற்றிக் கொள்ளும் தன்மையினை உடையனவாயிருக்கின்றன.

"மடகாஸ்கர் சிலந்தி என்பது மரங்களில் கட்டி தொங்கவிட்ட சாப்பாடு மூட்டைகளைப் போல் காணப்படும். சில, பெரிய முடிச்சுகளைப் போல் தென்படும். இவற்றை ஏதோ புதுமையான இரை என்று நாடி வரும் பூச்சிகளை இது பழமையான இரை என்று கருதியே உண்டு களிக்கும் எனக் கூறப்படுகிறது.

அலிலார்ட் என்னும் பிராணி மணலில் வசிக்கும் இயல்புடையது. இதன் மேல் பாகம் மணலின் நிறத்தை ஒத்திருக்கும். சிவப்பு நிறமுள்ள நீண்ட சதுரங்கள் இப் பிராணியின் மேல் பாகத்தில் இடை இடையே காணப்படும். இது சுருண்டு படுத்திருக்கையில் மணலில் சிவந்த புஷ்பங்கள் பூத்திருப்பதாக பல மூடப் பூச்சிகள் எண்ணும்படி செய்கின்றது. இப் பொய் புஷ்பங்களில் தேனிருக்குமென்று கருதி இதனருகே வரும் பொழுது இப் பூச்சிகளைப் பிரசங் கலந்த உணவென உண்ணும் இவ் வலிலார்ட்.

கடலிலுள்ள பல மீன்களின் கண்கள் அதிகப் பிரகாசம் பொருந்தினவாய் இருக்கின்றன. இது பாஸ்பரம் சேர்ந்திருப்பதால் உண்டாகுதல் கூடுமென அறிஞர்கள் கூறுவார்கள். இவை இரவில் பிரகாசம் பொருந்திய சிறு விளக்குகளைப் போல் காணப்படுகின்றன.

இவ் வொளியைக் கண்டு களிக்க வரும் சிறிய மீன்களைக் களிப்புடன் தங்கள் வாயில் அகப்படுத்திக்கொள்ளும் இந்தப் பெரிய மீன்கள்.

மானிடர்களில் சோம்பேறிகளிருப்பதைப் போலவே இந்தப் பிராணி வர்க்கங்களிலும் சோம்பேறிகளில்லாமலில்லை.

டேனியா சோலியம் என்னும் ஜந்து அநேக அடிகள் நீளமுள்ளது. இது நாடா போன்றிருப்பதால் இதற்கு "நாடாபூச்சி" என்ற பெயரும் உண்டு. இது பன்றியின் இறைச்சியை உண்ணும் மனிதருடைய குடலில் இருந்து கொண்டு ஒருவித வேலையும் செய்யாமல் அவர்கள் உட்கொள்ளும் உணவை முதலில் இப்பூச்சிதான் ஜீரணஞ் செய்யும். இப்பூச்சி சோம்பேறியாக இருக்க வேண்டுமென்ற சாபத்தால் தான் ஆண்டவன் இது மற்றோரிடத்திற்கு உணவுப் பொருளைத் தேடிச் செல்லாமலிருக்க கால்களையோ அல்லது ஓரிடத்திலிருந்து வேறிடத்திற்குச் செல்லும் பாக்கியத்தையோ அளிக்கவில்லை போலும்.

இதுபோலவேதான் மலேரியா முதலிய ரோகை உண்டு பண்ணும் கிருமிகளும். டேனியா சாப்பிட்டுவிட்டுச் சும்மாவிருந்தால், இக் கிருமிகள் 'உப் பிட்டவர்களை உள்ளளவும் நினை' என்பதை அடியோடு மறந்து அவர்கள் உடகொள்ளும் ஆகாரத்தை உட்கொண்டு தன் குடும்பத்தையும் விருத்தி செய்துகொண்டு, கடைசியில் அவர்களையும் உட்கொண்டுவிடும்.

டிஸ்டோமம் மேக்ரோஸ்டோமம் என்பதும் மேற் கூறிய சோம்பேறி இனத்தைச் சேர்ந்தவற்றில் ஒன்றே. இது திரஷ் என்னும் பறவையினுள் சென்றால் தான் நீடித்திருக்க முடியுமாம். இதுவோ கண்ணுக்குத் தெரியாத மிகச் சிறிய ஜந்து.

சூட்சம தரிசனியின் மூலம் இதைப் பார்த்தால் (400-மடங்கு பெரியதாய்) ஒரு கடுகு அவ்வள விருக்கும். இத்தகைய மிகச் சிறிய ஜந்துவை அந்தத் திரஷ் என்ற பறவை பார்க்கவேண்டும். பிறகு அதைக் கொல்லாமல் உயிருடன் உட்கொள்ளவேண்டும். இதற்காக இது செய்யும் யுக்தியைப் பாருங்கள்.

முதலில் இது ஒரு நத்தையைப் பிடித்துக்கொண்டு அதன் தலையிலிருக்கும் இரண்டு கொம்புகள் போன்ற உறுப்புக்களுக்குள் சென்று அந்தக் கொம்புகளை கடினமாகவும், உறுதியாகவும் செய்கிறது. இது இவ்வாறு செய்வதால் நத்தை அக்கொம்புகளை உள்ளே இழுத்துக் கொள்ளும் சக்தியை இழக்கின்றது. பிறகு அந்தக் கொம்புகளில் சிவப்பு, பச்சை இந்த இரண்டு நிறங்களையும் ஒன்றன்மேல் ஒன்றாக உண்டாக்கி அந்தக் கொம்புகளை அழகுறச் செய்கின்றது.

உயரத்தில் பறக்கும் திரஷ் இந்த அழகிய நிறங்க ளமைந்த கொம்புகளின் வனப்பிலே லயித்து அதனருகே வந்து அந்தக் கொம்பு போன்ற பாகத்தைக் குத்தி தின்றுவிடும். தின்னும் பொழுது இந்தச் சிறிய ஜந்து அந்தப் பறவையின் குடலுக்குள் சென்று அங்குச் சுகமாக வாழ்கின்றது.

சோம்பேறிகளுக்கும் யுக்தியும், புத்தி சாமர்த்தியமும் உண்டென்பதை நிலை நாட்டுகின்றது இச் சிறு டிஸ்டோமம் மேக்ரோல் டோமம்.

மனித உடம்பிற்குள் செல்ல வேண்டுமென்பது டேனியா சேஜினேடா என்னும் பிராணியின் பேரவா. இருந்தாலும் இது மனிதர் உடலுக்குள் நேராகச் செல்லக் கூடாதென்பது தேவ கட்டளை. என்ன செய்யும்? மனிதர்கள் மாட்டிறைச்சியை உண்பார்களென்பது இதற்குத் தெரியும். ஆகையால் இது முதலில் மாட்டின் உடலுக்குள் எவ்வாறோ புகுந்து கொள்ளுகிறது. அம் மாட்டிறைச்சியைப் புசிக்கும் மனித னுடம்பிற்குள் அது சென்றுவிடும் என்று நான் கூற வேண்டுமோ? கேஸ்டிரோஸ்டோச்மம் பிம்பிரிபேடம் என்ற பிராணிக்கும் மனித உடம் பென்றால் உயிர். ஆனால் இது பெர்ச் என்ற சிறிய மீனுக்குள் இருக்கவேண்டு மென்பது இதன் தலையிலிட்ட எழுத்து. ஆனால் அதன் துர் அதிர்ஷ்டம் இந்தச் சிறிய மீனை மனிதர்கள் உட்கொள்வதில்லை. இதன் சாப விமோசன காலத்தில் பெர்ச்சை ரோச் என்னும் பெரிய மீன் உட்கொள்ளும். ரோச்சை "கேட்ச்" பண்ணுவதில் மனிதர்களுக்கு ஒரு தனி பிரியம். ரோச்சை உட்கொள்ளும் மனிதனுடம்பிற்குள் ரோச்சினுள் இருக்கும் பெர்ச், பெர்ச்சினுள் இருக்கும் கேஸ்டிரோஸ்டோமம் முதலியன செல்லும். சிவாஜி பழக் கூடையினுள் புகுந்து வெளியே வந்தாரென்றால் இது பெர்ச்சினுள் புகுந்து உள்ளே செல்கின்றது. சென்று அவன் புசிக்கும் உணவைப் புசித்து தன் வாழ்க்கையை இனிது நடத்துகின்றது.

ஆப்பிரிகா கண்டத்திலுள்ள பாலை வனங்களிலுள்ள பெரிய பாம்புகள் பறவைகளை வேட்டையாடுகின்றன. பாலை நிலங்களில் மழைபெய்யும்

காடுகளில் பெரிய பாம்புகள் திறந்த வெளியிடங்களில் சுருண்டு படுத்திருக்கும். படுத்திருக்கும் பொழுது சுருள்கள் ஒன்றன்மே லொன்றாக அமைந்து சுமார் ஆறு அல்லது ஏழு அங்குலம் உயரத்திற்கு மேலிருக்கும். அப்பொழுது அச் சுருள்கள் பார்ப்பதற்கு ஒரு வட்ட வடிவமான தொட்டியைப் போல் காணப்படும். இத் தொட்டியினுள் நீர் நிறைந்திருப்பதைக் காணும் பறவைகள், அந்த நீரைப் பருக வரும் பறவையின் குருதியைப் பருகிடும் இந்தப் பாம்பு.

இப்பொழுது வேட்டையாடும் பிராணிகளிட மிருந்து தப்பித்துக் கொள்ளும் பிராணிகளின் சமர்த்தைக் கொஞ்சம் கவனிப்போம்.

நரி தன் விரோதிகள் தன்னை துரத்தி வருவதைக் கண்டால் பின்னங் கால்களால் மண்ணை வாரி விட்டுக்கொண்டே வரும். அவ்வாறு செய்தும் அதன் விரோதிகள் துரத்துமாயின் தன் உடலிலே அமைந்திருக்கும் ஓர் துர்க்கந்தம் நிறைந்திருக்கும் பையைத் திறந்து விடுமாம். இந்தத் துர்நாற்றத்தைப் பொறுக்க முடியாமல் இதன் விரோதிகள் துரத்துந் தொழிலி னின்றும் விலகி விடுமாம்.

ஜியோமெட்ரா என்னும் வெட்டுக்கிளி காய்ந்த குச்சியைப் போலவும் அல்லது மரப் பட்டையைப்போலவும் காணப்படும். இவைகள் செடியின் மத்தியிலிருப்பதால் இவற்றை இதன் எதிரிகள் காய்ந்த குச்சி அல்லது பட்டை என்றெண்ணிச் சென்று விடும்.

கிரிலேலின் என்னும் வெட்டுக்கிளி இலை வடிவமுள்ளது. இது இலைகளின் மீது இருக்கும் பொழுது பச்சைநிறம், பொருந்தியதாயும், பட்டைகளி லிறங்கி வரும்பொழுது பட்டைநிறமாகவும், மண் தரையி லிருக்கும் பொழுது மண்ணிறமுள்ளதாயும் மாற்றிக்கொள்ளும் சக்தியினை உடையதாய் விளங்குகின்றது. இன்னும் அனேக வண்ணாத்திபூச்சிகள் உண்மை மலர்களைப்போல் இருப்பதால் இவைகளின் விரோதிகள் இவற்றை மலர்களென கருதி வாளா சென்று விடும்.

இன்னும் ஒருவித பூச்சி காய்ந்த இலை வடிவமுள்ளதாக இருக்கின்றது. விரோதிகள் வருவதைக் கண்டால் இது காய்ந்த இலை வடிவத்தை மாற்றிக் கொண்டு ஒரு காம்பின் வடிவை அடைகிறது. விரோதி சிறிது தூரஞ் சென்றதும் இது ஏதோ ஒரு வேலைக்கு மிகவும் அவசரமாக செல்வதைப் போல் அனேக குட்டிக்கரணங்கள் போட்டுக்கொண்டே செல்லும். இது தன் விரோதிகள் பின் தொடர்ந்து வருதலைக் கண்டவுடன் குச்சியின் வடிவம் நீங்கப்பெற்று ஒரு பசும் இலை வடிவை அடைகின்றது. இதைத் தொடர்ந்து வந்த இதன் விரோதிகள் தாங்கள் தேடிவந்த பிராணி அகப்படாததற்கு மிகவும் வருந்தி திரும்பிச் சென்று விடுகிறது.

ஆகையால் அன்பர்களே! கேவலம் ஐந்தறிவும், ஓரறிவும் உள்ள பிராணி தாவரங்கள் இவ்வளவு சாமர்த்தியமான தொழில்களை கெட்ட வழியிலோ அல்லது நல்ல வழியிலோ செய்யும்பொழுது அனேகம் அறிவுகள் உடைய மானிடர்கள் ஏன் சமர்த்தை நல்லவழியில் காட்டிச் சோம்பலின்றி இருக்கக் கூடாது?

---

## சித்திரபானு௵ தை௴ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியார மணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | சந்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 7 | 30 | 18 | 270 | 01 | 6 | 09 | 235 | 34 | 285 | 00 | 85 | 12 | 282 | 01 | 43 | 11 | 123 | 18 |
| 2 | 7 | 34 | 15 | 271 | 04 | 18 | 39 | 236 | 15 | 285 | 51 | 85 | 04 | 283 | 31 | 43 | 09 | 123 | 14 |
| 3 | 7 | 38 | 11 | 272 | 05 | 31 | 16 | 236 | 55 | 285 | 51 | 85 | 57 | 284 | 25 | 43 | 07 | 123 | 11 |
| 4 | 7 | 42 | 08 | 273 | 07 | 43 | 53 | 237 | 36 | 285 | 51 | 84 | 49 | 285 | 37 | 43 | 05 | 123 | 08 |
| 5 | 7 | 46 | 04 | 274 | 08 | 56 | 05 | 238 | 14 | 285 | 19 | 84 | 42 | 286 | 50 | 43 | 04 | 123 | 05 |
| 6 | 7 | 50 | 01 | 275 | 09 | 68 | 18 | 238 | 53 | 284 | 47 | 84 | 34 | 288 | 03 | 43 | 02 | 123 | 01 |
| 7 | 7 | 53 | 57 | 276 | 10 | 80 | 28 | 239 | 29 | 284 | 13 | 84 | 27 | 289 | 17 | 43 | 00 | 122 | 58 |
| 8 | 7 | 57 | 54 | 277 | 12 | 92 | 39 | 240 | 06 | 283 | 38 | 84 | 19 | 290 | 31 | 42 | 58 | 122 | 55 |
| 9 | 8 | 01 | 50 | 278 | 13 | 104 | 42 | 240 | 42 | 283 | 04 | 84 | 12 | 291 | 45 | 42 | 56 | 122 | 52 |
| 10 | 8 | 05 | 47 | 279 | 14 | 116 | 45 | 241 | 19 | 282 | 29 | 84 | 04 | 292 | 59 | 42 | 54 | 122 | 48 |
| 11 | 8 | 09 | 43 | 280 | 15 | 129 | 07 | 241 | 55 | 281 | 55 | 83 | 57 | 294 | 13 | 42 | 52 | 122 | 45 |
| 12 | 8 | 13 | 40 | 281 | 17 | 141 | 29 | 242 | 32 | 281 | 20 | 83 | 49 | 295 | 27 | 42 | 50 | 122 | 42 |
| 13 | 8 | 17 | 36 | 282 | 18 | 154 | 18 | 243 | 08 | 280 | 45 | 83 | 42 | 296 | 41 | 42 | 49 | 122 | 39 |
| 14 | 8 | 21 | 34 | 283 | 19 | 167 | 07 | 243 | 45 | 280 | 10 | 83 | 34 | 297 | 55 | 42 | 47 | 122 | 35 |
| 15 | 8 | 25 | 30 | 284 | 20 | 180 | 25 | 244 | 23 | 279 | 36 | 83 | 27 | 299 | 08 | 42 | 45 | 122 | 32 |
| 16 | 8 | 29 | 27 | 285 | 22 | 193 | 44 | 245 | 02 | 279 | 02 | 83 | 20 | 300 | 21 | 42 | 42 | 122 | 29 |
| 17 | 8 | 33 | 23 | 286 | 23 | 207 | 30 | 245 | 43 | 278 | 29 | 83 | 14 | 303 | 33 | 42 | 40 | 122 | 26 |
| 18 | 8 | 37 | 20 | 287 | 24 | 221 | 16 | 246 | 24 | 277 | 55 | 83 | 07 | 302 | 45 | 42 | 37 | 122 | 22 |
| 19 | 8 | 41 | 16 | 288 | 25 | 235 | 25 | 247 | 05 | 277 | 22 | 83 | 01 | 303 | 57 | 42 | 35 | 122 | 19 |
| 20 | 8 | 45 | 13 | 289 | 26 | 249 | 34 | 247 | 46 | 276 | 48 | 82 | 55 | 305 | 10 | 42 | 32 | 122 | 15 |
| 21 | 8 | 49 | 09 | 290 | 27 | 263 | 53 | 248 | 27 | 275 | 15 | 82 | 48 | 306 | 22 | 42 | 31 | 122 | 12 |
| 22 | 8 | 53 | 06 | 291 | 28 | 278 | 13 | 249 | 08 | 275 | 41 | 82 | 41 | 307 | 35 | 42 | 30 | 122 | 09 |
| 23 | 8 | 57 | 02 | 292 | 29 | 292 | 29 | 249 | 49 | 275 | 08 | 82 | 35 | 308 | 47 | 42 | 30 | 122 | 06 |
| 24 | 9 | 00 | 59 | 293 | 30 | 306 | 45 | 250 | 30 | 274 | 34 | 82 | 29 | 309 | 59 | 42 | 30 | 122 | 02 |
| 25 | 9 | 04 | 55 | 294 | 31 | 320 | 41 | 251 | 09 | 273 | 36 | 82 | 23 | 310 | 11 | 42 | 30 | 121 | 59 |
| 26 | 9 | 08 | 52 | 295 | 32 | 334 | 38 | 251 | 48 | 272 | 37 | 82 | 16 | 312 | 24 | 42 | 30 | 121 | 56 |
| 27 | 9 | 12 | 48 | 296 | 33 | 348 | 04 | 252 | 30 | 271 | 56 | 82 | 10 | 313 | 36 | 42 | 31 | 121 | 53 |
| 28 | 9 | 16 | 45 | 297 | 34 | 1 | 35 | 253 | 12 | 271 | 14 | 82 | 04 | 314 | 49 | 42 | 32 | 121 | 49 |
| 29 | 9 | 20 | 41 | 298 | 35 | 14 | 27 | 253 | 56 | 271 | 46 | 82 | 58 | 316 | 01 | 42 | 34 | 121 | 46 |
| 30 | 9 | 24 | 38 | 299 | 36 | 27 | 24 | 254 | 40 | 272 | 18 | 81 | 51 | 317 | 14 | 42 | 37 | 121 | 42 |

### ஆகாயக் காட்சி.

இம்மாதம் 3உ பின் இரவு (17-1-43 காலை) மணி 2 நிமிஷம் 50-க்கு வடக்கில் பாகை 3 கலை 30-ல் சனி-சந்திர சமாகமம். 7உ (20-1-43) மாலை அஸ்தமனத்திற்குப் பின் மணி 7 நிமிஷம் 20-க்கு வடக்கில் பாகை 8 கலை 30-ல் குரு-சந்திர சமாகமம்.

* அயனாம்சம் பா-22 கலை-47 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.

† ராகு ஸ்புடத்துடன் பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சித்திரபானு௵ தைமீ—கலியுகாதி 5044, சாலிவாகனம் 1865,
பசலி 1352, கொல்லமாண்டு 1118, ஹிஜிரா 1362
இங்கிலீஷ் 1943௵ ஜனவரிமீ—1943௵ பிப்ரவரிமீ

| தைமீ | ஜனவரிமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வியா | நவ 60 | அசு 33-37 | அ 33-37 சி | பொங்கல் பண்டிகை |
| 2 | 15 | வெள் | நவ 0-2 | பர 36-1 | சித் 60 | மாட்டுப்பொங்கல் |
| 3 | 16 | சனி | தச 1-48 | கி✲ 39-36 | அமி 60 | கரிநாள், கிருத்திகை |
| 4 | 17 | ஞா | ஏகா 7-47 | ரோ 44-25 | சித் 60 | விதை விதைக்க |
| 5 | 18 | திங் | து 8-25 | மிரு 50-23 | அ 50-23 சி | கூர்ம துவாதசி |
| 6 | 19 | செவ் | திர 13-18 | திரு 56-24 | சித் 60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 7 | 20 | புத | ச○ 18-36 | புன 60 | அமி 60 | திருதினஸ்பிருக் |
| 8 | 21 | வியா | பௌ 24-1 | புன 3-0 | மர 60 | தைப்பூசம், பௌர்ணமி |
| 9 | 22 | வெள் | பிர 38-49 | பூச 9-1 | ம 9-1 அ | புஷ்ய பருவம் |
| 10 | 23 | சனி | துதி 33-1 | ஆயி 14-25 | ம 14-25 சி | சங்கிரமசாந்தி செய்ய, வீடு கட்ட |
| 11 | 24 | ஞா | திரு 36-35 | மக 19-11 | சித் 60 | கரிநாள் [விடுதல் 22-நாழி |
| 12 | 25 | திங் | சது 38-25 | பூர 23-24 | அ 23-24 சி | வாஸ்துபுருஷன் நித்திரை |
| 13 | 26 | செவ் | பஞ் 39-37 | உத் 25-47 | ம 25-47 சி | |
| 14 | 27 | புத | சஷ் 39-1 | அஸ் 27-0 | ம 27-0 சி | |
| 15 | 28 | வியா | சப் 37-11 | சித் 27-1 | சி 27-1 அ | |
| 16 | 29 | வெள் | அ 34-13 | சுவா 26-25 | சித் 60 | |
| 17 | 30 | சனி | நவ 30-35 | வி 24-36 | சித் 60 | |
| 18 | 31 | ஞா | தச 26-23 | அ 21-37 | சித் 60 | |
| 19 | 1 | திங் | ஏகா 21-37 | கே 18-1 | அ 18-1 சி | |
| 20 | 2 | செவ் | து 15-35 | மூல 14-25 | அமி 60 | |
| 21 | 3 | புதன் | திர 9-37 | பூரா 10-13 | சித் 60 | மாச சிவராத்திரி |
| 22 | 4 | வியா | ச● 3-36 அம 57-36 | உத் 6-1 | ம 6-1 சி | அவமாகம், சர்வத்திர அமாவாசை |
| 23 | 5 | வெள் | பிர 52-48 | திரு 1-48 அவி 58-12 | ம 1-48 சி | மாகசத்தம், அவமாகம், வீடுகட்ட |
| 24 | 6 | சனி | துதி 48-1 | சத 55-13 | அ 55-13 ம | வியாதியஸ்தர் குளிக்க |
| 25 | 7 | ஞா | திரு 43-47 | பூர 52-47 | சி 52-47 அ | மாடுவாங்க |
| 26 | 8 | திங் | சது 40-49 | உட் 51-36 | சித் 60 | மாச சதுர்த்தி விரதம் |
| 27 | 9 | செ | பஞ் 38-28 | ரே 51-36 | சித் 60 | மாரண பஞ்சமி |
| 28 | 10 | புத | சஷ் 37-48 | அசு 49-49 | ம 49-49 சி | சஷ்டி விரதம் [விரதம் |
| 29 | 11 | வியா | சப் 37-49 | பர 54-35 | சி 54-35 ம | ரதசப்தமி, சந்திரார்க்க |
| 30 | 12 | வெ | அஷ் 40-11 | கி✲ 58-12 | சி 58-12 ம | கிருத்திகை, விஷ்ணுபாத புண்யகாலம் |

1943௵ பிப்ரவரிமீ

| | | | |
|---|---|---|---|
| | | சனி | குரு |
| கே | 7-தனு-தம் 15-கும்ப-சுக் | | |
| சூ-பு சுக் | | | ராகு |
| | அவ் | | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

# திருவிளையாடற் புராண வசனம்

**64 திருவிளையாடல்களுக்கும் ஐதீகப் படங்கள் உள்ளன.**

**காலிகோ பைண்டு செய்தது விலை ரூ. 2.**

சிவபெருமான், சோமசுந்தரக் கடவுளாக மதுரையம்பதியில் எழுந்தருளி அடியார்கள் உய்யும்பொருட்டு நடத்திக் காட்டிய அற்புதத் திருவிளையாடல்கள் அறுபத்துநான்கும் இதில் அடங்கியிருக்கின்றன. இந்நூல் சிவபெருமானுடைய மகிமைகளைத் தெள்ளிதில் உணர்த்தும். இன்னும் சிவபெருமான் அடியார்க்கெளியன் என்பதையும், அவர் தம்மை நம்பின பக்தர்களை ஆட்கொள்ளுதற்கு எத்தகைய தொழிலையும் புரிந்து அவர்களுக்கு உதவிசெய்வான் என்பதையும், சிவனடியார் சிறப்புகளையும், எல்லோருக்கும் விளக்கமாகத் தெரிவிக்கும்.

# ஞானசெல்வாம்பாள் அல்லது

## இரண்டு சகோதரிகள் (5-பாகங்கள்.)

ஞானம்பாள் செல்வாம்பாள் என்ற இரண்டு சகோதரிகளே இந்நாவலில் கதாநாயகிகள். இந்த கன்னிகைகள் மேலதிகாரமின்றித் தங்கள் பிரியப்படி நடக்குமாறு விடப்பட்டனர். அன்னிய வாலிபரிடம் தாராளமாய்ப் பழக்கப்பட் விடப்படுவதே நல்ல நாகரீகமென்று கருதுவது முதலிய ஆசாரங்களால் விளையும் தீங்குகள் அநுபவமாய் விளக்கப்பட்டிருக்கின்றன. அதோடு பெரும்பாலான கன்னிகைகள் உலக அநுபவமில்லாத அந்தப் பருவத்தில் தங்களுக்குத் தகுதியான கணவர்களைத் தாங்களே தேர்ந்தெடுத்துக்கொள்ளச் சக்தியற்றவர்களென்பதும், அயோக்கியர்களது வஞ்சக வலையில் அவர்கள் எளிதில் சிக்கிக்கொண்டு தங்கள் வாழ்நாள் முழுவதையும் பெருந்துன்பத்தை யநுபவிக்க நேருமென்பதும் இக்கதையால் நன்கு விளங்கும்.

இக்கதாநாயகிகளின் நடக்கைகளால் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் குணங்களைக் கைவிடாமல் நன்னெறியைக் கடைப்பிடித் தொழுகும் கன்னிகை முடிவில் நல்ல பலன்களையும், மேலான பதவியையும் அடைவாளென்பதும், அற்ப போகங்களிலும் படாடோப வாழ்க்கைகளிலும் இச்சை வைப்பவள் துன்பத்தையே யடைவாளென்பதும் தெளிவாய் விளக்கப்படுகிறது.

இக்கதையில் சம்பந்தப்பட்ட முக்கியமான ஆடவராகிய தேவராஜன் என்பவனுடைய சரித்திரத்திலும், கிருஷ்ணராஜன் மச்சநாதன் என்பவர்கள் சரித்திரத்திலும் மிக்க ஆச்சரியமும் மனதை யடியோடு கவர்ந்து கொள்ளத்தக்க அபூர்வ சம்பவங்களும் நிறைந்திருப்பதோடு பல அரிய நீதிகளும் நன்னெறிகளும் அனேகம் பொதிந்து கிடக்கின்றன என்பது வாசிப்போர்க்கு நன்கு புலப்படும். 5-பாகங்கள் விலை 9—10—0.

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.**

## பூவுலக வாழ்க்கைக்கு இன்றியமையாத சிங்கபலத்தைத் தருவதேது?




முறையாய்ச் செய்த அபக்காந்த செந்தூரத்தைக்காட்டிலும் தேகபலத்தைத் தரும் ஔடதம் வேறொன்றுமில்லை.

**விளம்பரம்.** இதைக் கண்ணுறும் கனவான்களே! இந்த லேகிய செந்தூரங்கள் சாமான்யமானவையல்ல. அபாரமான பலத்தைத் தரக்கூடிய சக்தி அமைந்துள்ளவை. உறுதியாய் இவற்றை நம்பி வாங்கிச் சாப்பிட்டால் ஒரு தடவையிலேயே இவற்றின் குணம் நன்கு விளங்கும்.

இந்த லேகிய செந்தூரங்களால் நிவர்த்தியாகும் முக்கிய வியாதிகளாவன:—

தற்காலத்தில் மனிதரின் பால்ய சேஷ்டையாலும், இரத்தப் போக்காலும் அவருக்கு உண்டான 20 வகை மேகரோகங்கள், சூலைரோகம், குன்மரோகம், பித்தபாண்டு, கை கால் முடக்கு, ஓடுவாய்வு, பித்த கப்பம், நெஞ்சு தொண்டை எரிச்சல், வயிற்றுப்பிசம் அஜீரணம், பசியில்லாமை, தாது ஹீனம், தேக உளைச்சல், கண்ணில் நீர்வடிதல், சோம்பல், நித்திரையில்லாமை, தலை சுழற்றல், நீர் இறங்கும்போது பொறுக்கமுடியாத பாதையைத் தரும் நீர்மேகம் முதலியவைகள் ஆச்சரியப்படத்தக்க விதமாய் நீங்கிவிடும். பயங்கரமான மேக சம்பந்த வியாதிகளைப் பத்தே வேளையில் போக்கி சப்த நாம்புகளுக்கும் முறுக்கேற்றி அபரிமிதமான இரத்த விருத்தியைப் பெருக்கி பலத்தைத் தருவதில் இதற்குமிஞ்சின இலேகிய பஸ்பம் வேறொன்றுமில்லை என்று நாம் உறுதியாகச் சொல்லுவோம். இதல்லாமல் தேகத்தைப் புஷ்டியாக்கித் தேகத்தடிப்பு கைகால் வெளுத்திருத்தல் முதலிய வியாதி

ஷனைக் கண்டித்து தினந்தோறும் மலத்தை தாராளமாய்ப் போக்குவதில் இந்தலேகிய செந்தூரங்களே முதன்மையானது வென்பதை நாம் எமது அநுபவத்தில் கண்டிருக்கிறோம். சிற்க இந்த லேகிய செந்தூரங்கள், மேற்கண்ட வியாதிகளைக் கண்டிப்பாய் நிவர்த்திக்குமா என்னும் சந்தேகமுடையோர் பரீக்ஷார்த்தமாக முதலில் 48-நாளாவது வாங்கி யுண்டால் இவற்றின் அபார குணம் தெரியவரும். தவிர யாங்கள் இம்மகத்துவம் பொருந்திய லேகிய செந்தூரங்களை எவ்வளவு சிறப்பித்துக் கூறியபோதிலும் அது தகும். மேலும் இவற்றை நோய் உள்ளவரே தான் சாப்பிடவேண்டும் என்ற அவசியமில்லை; யாவரும் சாப்பிடலாம். நோய் உள்ளவர்களைவிட நோய் இல்லாதவர்கள் எண்ணிக்கையாக 48-நாள் இந்த லேகிய செந்தூரங்களை யாதும் பத்தியமின்றிச் சாப்பிட அவர்க்கு நல்ல பலம் ஏற்படும். இது தவறாது. இவற்றைத் தருவித்து நண்பர் எண்ணிக்கையாகச் சாப்பிட்டு 10-நாளைக்குள் குணம் இல்லாவிடில் உடனே தெரியப்படுத்தினால் கட்டாயம் இவற்றிற்கு வாங்கிய பணம் வாப்ஸ் செய்யப்படும். தவிர மேற்காட்டிய நோய்கள் உடையோர் 48-நாட்கள் சாப்பிடுவார்களேயானால் அவை முழுதும் நீங்கிவிடும். அப்படி நீங்கிக் குணம் ஏற்படாவிடில் நாங்கள் அதற்கு உத்தரவாதிகளாவோம். யாங்கள் இவ்வளவு அருமையான லேகிய செந்தூரங்களை எவ்வளவோ சிரத்தையுடன் கஷ்டப்பட்டு முடித்துப் பரோபகார்த்தமாக வெளியிட்டோம். இவ்வருமை வாய்ந்த லேகிய செந்தூரங்களுக்குப் பொர்ன்மெடல், வெள்ளிமெடல், பெற்றதல்லாமல் ஆயிரக் கணக்கான யோக்யதாம்ச பத்திரங்களும் பெற்றிருக்கின்றோம். ஆதலின் நமது லேகிய செந்தூரங்கள் நாம் சொன்னபடி குணத்தைக் கொடுக்கும் என்பதைப்பற்றி ஜவாப்தாரியாக பிருக்கக் காத்துக் கொண்டிருக்கிறோம்; இது உண்மை. இவற்றை ஒரேதரம் தருவித்துப் பாருங்கள்; எமது உண்மை விளங்கும்.

வாதாதிக்க தோஷத்தினாலாவது, துரப்பியாசத்தினாலாவது, அதிக மனக்கவலையினாலாவது, அடிக்கடி உண்டாகும் நோயினாலாவது, மற்றெந்த காரணத்தினாலாவது பலமிழந்தவர்கள் எண்ணிக்கையாக ஷ. லேகிய செந்தூரங்களைப் புசிப்பார்களானால் இவை தேகாரோக்கியம், வலிமை, அழகு முதலியவற்றை அவர்க்குக் கொடுத்து அவர்களைச் சந்தோஷிக்கச் செய்யுமென்பதில் தடையில்லை. வெளியூர்க் கனவான்கள் இந்த லேகிய செந்தூரங்களில் முழு நம்பிக்கை வைத்து ஒரே ஒருதரம் இவற்றைப் பரீக்ஷிப்பார்களானால், அவர்கள் அவசியம் ஆனந்தமடைவார்கள்.

இந்த லேகிய செந்தூரங்களுக்குப் பத்தியமே கிடையாது. சர்வ வகாரங்களையும் நீக்குதலின்றி சாப்பிடலாம். மருந்து சாப்பிடும்போது பசி அதிகமாய் எடுக்கும் ஆதலால் பச்சைப்புளியற்றுக் குழம்பு, கறி, மார்க் கண்ட ருப்பு, இவைகளை அதிகமாகப் பசிக்கத் தணிக்கக்கூடிய விதமாகத் தாமதம் செய்யாமல் சாப்பிடல் வேண்டியது. இவற்றைப் புசிக்கும் போதெல்லாம் பலகாராதிகள் சாப்பிடல் வேண்டும். தயிர், பால் முதலியவைகள் எவைகளாயிருந்தாலும் சந்தேகமின்றி சாப்பிட்டு வரலாம்.

இவ்வருமை வாய்ந்த லேகிய செந்தூரங்களை மட்டும் ஒருவர் தருவித்து எண்ணிக்கையாக 48-நாள் சாப்பிடுவாரேயானால் இவை தேகத்தில் ஊற ஊற, மேகமெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கி அவர் தேகமானது வலுத்துப் புதிய ரத்தம் பாவி தன் வாழ்நாள் பரியந்தம் இளைக்காமலிருக்கும். இவற்றைப் புருஷன் பெண்சாதி இருவரும் ஏககாலத்தில் ஒற்றுமையாய்ச் சாப்பிட்டு வந்தார்களேயானால், அவர்க்கு உதிக்கும் மக்கள் விருத்

தேஜஸோடு தோன்றுவார்கள். இது உண்மை. இதை அதிகம் எழுதுதல் அனாவசியம். இந்தியா, ஸிலோன் ஆகிய உள் நாடுகளுக்கு 24-நாள் சாப்பிடக்கூடிய லேகியமும் செந்தூரமும் விலை ரூ. 1-12-0. போஸ்டேஜ் அணா 8. ஒரே தடவை 48-நாள் மருந்து வாங்குவோர்க்கு போஸ்டேஜ் உள்பட ரூ.4.

பர்மா, பினாங்கு, சிங்கப்பூர், செட்டால் முதலிய அயல்நாடுகளுக்கு 24 நாள் சாப்பிடக்கூடிய மருந்து விலை ரூ. 1-12-0. தபாற்கூலி ரூ. 1-4-0.

48-நாள் மருந்து வாங்குவோருக்கு போஸ்டேஜ் உள்பட ரூபா 5-8-0 சிங்கப்பூர், பினாங்கு, மலாக்கா முதலிய வெளிநாடுகளுக்கு வி. பி. ஆர்டர் இருந்தாலும் முன்பணம் அனுப்பாதவர்களுக்கு மருந்து அனுப்பப்பட மாட்டாது.

## விலாசம்:—லேகியம் டிபோ,

## நெ. 6, வெங்கடேச மேஸ்திரி தெரு, மதராஸ்.

---

# நரை மயிர் கருக்குந் தைலம்



தற்காலத்தில் பலவிதமாகச் செய்து விற்கப்பட்டு வருகிற கப்புகள் மயிரைச் செம்பட்டையாகவும், பசுமை நிறமாகவும், சாம்பல் வர்ணமாகவும் ஆக்கி விகாரப்படுத்தி விடுகின்றன. நமது தைலமோ நரைத்த மயிருக்குப் பூசிய 3 நிமிஷத்திற்குள்ளாக நரைப்பதற்கு முன்பிருந்த கருமை நிறத்தையும் பளபளப்பையும் உண்டுபண்ணும். மேலே கூறியுள்ள விகார குணங்கள் இதில் உண்டாகமாட்டா. இதைப் பூசிய பிறகு முகலட்சணமும் வசீகரமு முண்டாகிறபடியால் வயோதிகரும் வாலிபரைப்போல் தோற்றப்படுவார்கள். இதை உபயோகிக்கும் விதம் பார்சேலோடு தெரிவிக்கப்படும். இதன் விலை ரூபா 1.

# கர்ணபிந்து



காதில் சீழ் வடிதல், காது குத்தல், காது கேளாதிருத்தல், காதில் நமைச்சல் முதலிய வியாதிகளுக்கு இந்த மருந்தில் 2-துளி காலை மாலைகளில் காதில் விட்டுவர, காதிலுள்ள நோய்களெல்லாம் நீங்கிவிடும். புட்டி 1-க்கு அணா 4. வி. பி. தபால்கூலி வேறு.

# (காட்லீவர் ஆயில்) மீன் எண்ணெய்

இது பலத்தை உண்டாக்குகிறது. தவிர இருமலினால் உண்டாகும் இளைப்பையும் அடக்கும். இளைத்தவர்கள் உபயோகித்தால் தேகம் புஷ்டியாகும், இரத்தத்தைச் சுத்தி செய்யும், சுவாசகாசங்களின் ரோகத்தை குணப்படுத்தும், சரீரத்தினுடைய ஒவ்வொரு பாகத்துக்கும் பலத்தைக் கொடுக்கும். இதைக் குழந்தைகளுக்கும் கொடுக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூபா 1—8—0.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# நாராயண சஞ்சீவித் தைலம்

இத்தைலம் முழுவதும் பச்சிலைகளாலும், பசும்பால் முதலிய சிரேஷ்டமான வஸ்துக்களாலும் ஆயுர்வேத முறைப்படி மிகப் பரிசுத்தமாகத் தயார் செய்யப்பட்டது. இத்தைலத்தில் ஸ்நானம் செய்வதினால் தலைவலி, ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, மண்டைக்குத்தல், கண் எரிச்சல், கண்களில் நீர் வடிதல், சாலேஸ்வரம், காதுநோய், தலைபாரம், அதிக வெய்யிலினால் உண்டாகும் சிரரோகங்கள், சரீரதாபம், மூளைக்கொதிப்பு முதலியவைகள் ஆச்சரியப்படும் விதமாய்த்தீரும். தொடர்ச்சியாய்ச் செய்துவரும் இதன் ஸ்நானங்களினால் நரைத்த மயிர் கருத்துவிடும். மூளையைக் குளிரப்பண்ணி அறிவையும் திடச் சித்தத்தையும் உற்சாகத்தையும் உண்டு பண்ணுவதில் இது நிகரற்றது. சாராய சத்து முதலிய ஆங்கில வாசனைகள் இதில் சேர்க்கப்படவில்லை. சுத்தமான பச்சிலை கிழங்கு புல் முதலிய இந்திய வாசனைகளே சேர்க்கப்பட்டிருக்கின்றன. தினம், இதனைத் தலையில் தடவி வாரி வருவதினால் மயிர் கருப்புப் பட்டைபோல் பளபளப்பாகக் கருத்து ஆலம் விழுதுபோல் நீண்டு வளரும். இன்னும் இது, உஷ்ணத்தைத் தணித்து ஞாபக சக்தியையும், முகவசீகரத்தையும் உண்டாக்கும். கஷ்டப்பட்டு வேலை செய்தவர்களும் வெகுதூரம் நடந்தவர்களும் படுக்கும்போது சிறிது தைலத்தை உள்ளங்கை உள்ளங்கால்களில் தேய்த்துக்கொண்டால் காலையில் எழுந்திருக்கும்போது தேகம் ஆரோக்கியமாய் இருக்கும். 5 பலம் டின் 1-க்கு ரூபா 1. தபால் சார்ஜ் பிரத்தியேகம்.



# கூந்தல் வளரும் துளி

இதை நல்லெண்ணெய் அல்லது தேங்காயெண்ணெயில் கலந்து பிரதிதினம் மயிருக்குப் பூசிவந்தால் கூந்தலானது ஆலம் விழுதுபோல் உண்மையாய் வளரும். அதில் பேன் சேராது; சுண்டு உண்டாகாது; மயிர் உதிராது. வழுக்கை விழுந்த இடத்திலும் மயிர் முளைக்கும். புட்டி 1-க்கு அணா 12. தபாற்கூலி வேறு.



# சூதக நிவாரணி மாத்திரை

ஸ்திரீகளுக்கு மாதாந்திர பஹிஷ்டை (ருது) கிரமமாக வெளிப்படாமல் காலந் தவறி வெளிப்படுதல், சிலகாலம் வெளிப்படாமலேயிருத்தல், வயிற்றுவலி, ஜுரம், மார்பு நோய், மயக்கம், கழுத்திசிவு, ஜன்னி தோஷங்கள், மஞ்சட் காமாலை, உணர்ச்சியின்றி சிறுநீர் பெருக்கெடுத்தல், மூர்ச்சையாகுதல், மார்பு படபடவென்று அடித்துக்கொள்ளுதல், மேல்மூச்சு வாங்குதல், மர்மஸ்தானத்தில் பொறுக்கமுடியாத வேதனை உண்டாகுதல் இன்னும் மாதர்களுக்குக் காணும் ருது சம்பந்தமான எல்லா வியாதிகளையும் கண்டித்து கருப்பகோசத்தைச் சரிப்படுத்திச் சந்தான விருத்தியை உண்டாக்கும், ஒரு டப்பி மாத்திரை விலை ரூபா 1.



---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# ஜீவாதார சஞ்சீவி திராவகம்

இது தங்கம், அயம், மற்றும் சில சத்துப் பொருள்களைச் சேர்த்து அநுபோக முறையில் தயார் செய்யப்பட்டதாகும். சரீரத்திலுள்ள நரநாடிகளும் தளர்ந்து பலங் குறைந்து அகால மரணத்துக் குள்ளாகும் கொடிய விபத்துக்கு இத்திராவகம் கைகண்ட சஞ்சீவியைப் போன்றது. இது சரீரத்திற்கு சுகத்தைக் கொடுத்து, ஆயுளை விருத்திசெய்து, பலவீனம், கைகால் ஓய்ச்சல், சோம்பல், தேகம் மெலிதல், ஜீரணக் குறைவு, புளியேப்பம், பசியின்மை, ஞாபகக் குறைவு, தைரியமின்மை, தாது நஷ்டம், கண்டமாலை, மலச்சிக்கல், நரம்புத் தளர்ச்சி, மார்நோய், சரீரம் வெளுத்தல் முதலிய வியாதிகளை ஒரு வாரத்திற்குள் மாந்திரீகம்போல் குணப்படுத்தும். இதுவரையில் எந்த வைத்தியர்களாலும் கண்டுபிடிக்கப்படாத அவுஷதம் இதுவே என்பதை இதை உட்கொண்ட ஐந்து நிமிஷத்தில் தெரிந்து கொள்ளலாம். குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரையிலும் உபயோகிக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூ. 1. புட்டி 3-க்கு விலை ரூ. 2—8—0.



# மோஹினி பரிமள கூந்தல் தைலம்




இந்தத் தைலத்தை கூந்தலில் தடவிக் கொண்டால் அன்று மலர்ந்த புஷ்பங்களின் வாசனைக்கு நிகராயிருக்கும். கூந்தலுக்கு வளர்ச்சியைத் தருவதுடன் தலைக் கொதிப்பையும் அடக்கி தேகத்திற்கு ஆரோக்கியத்தைத் தரவல்லது. இதன் விலை அணா 12.

## சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 4-வரையில் தேகநிடமறிந்து சாப்பிட்டால் சுகமாய்ப் பேதியாகிவிடும். இம் மாத்திரையை சிறு குழந்தைகளுக்கு 1-மாத்திரை முதல் தேகநிடமறிந்து முலைப்பாலில் உபயோகிக்கலாம். வாய்க் கசப்பு, கொமட்டல், நெஞ்சு கரகரப்பு, வாந்தி, வயிற்றுவலி முதலிய எவ்வித கெட்ட குணம் கிடையாது. உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

24-மாத்திரை புட்டி 1-க்கு விலை அணா 4.

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# அயத்தங்கத் திராவகம்

மித்திரர்களே! இந்த அபூர்வ மருந்தானது அநேக கொடிய வியாதிகளை ஆச்சரியமாகக் கண்டிக்கக் கூடியது. இதை அநேக ஆயிரக் கணக்கான ஜனங்கள் உபயோகித்துச் சந்தோஷிக்கின்றனர். வியாதியினாலாவது வேறு எந்தக் காரணத்தினாலாவது இளைத்துப்போயிருக்கும் தேகத்தைப் புஷ்டியாக்கி பலவிருத்தி தருவதில் இது நிகரற்ற மருந்தாகும். ஆங்கிலேய முறைப்படி தயாரிக்கப்பட்ட அருமையான மருந்து. சாப்பிடுவதற்கு மிக இன்பமாயிருக்கும். இருமல் நோய்கண்டு அவஸ்தைப்படுபவர்கள் இதை உட்கொண்டால் இரண்டே வேளையில் ஆச்சரியமான சுகத்தை யடைவார்கள். இதனால் உண்டாகக்கூடிய அநேக குணங்களில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிக்கிறோம்.



இது, நரைத்த மயிரைக் கருப்பாக்கும், உஷ்ணத்தினாலாவது, புழு வெட்டினாலாவது மயிர் உதிர்வதை நிறுத்தும்; இதனால் நீர் வியாதிகள் தீரும். கண்ணெரிச்சல், கைகால் காந்தல் இவை தீரும். இன்னும் இது முக வசீகரத்தை உண்டாக்கும், தேக அசதியை யோட்டும். ஜீரண சக்தியையும், நல்ல பசியையும் உண்டாக்கும். மனதை அதிக உற்சாகப்படுத்தும், நரம்புகளுக்கு அதிக வலுவைத் தரும், தேகத்தில் நல்ல இரத்தத்தைச் சுரப்பிக்கும், க்ஷயரோகத்தை க்ஷணத்தில் தீர்க்கும், சத்த தாதுக்களுக்கும் நல்ல பலத்தைத் தரும், மூலச்சூடு, மூலவாய்வு, மலச்சிக்கல் ஆகியவை தீரும்.

இந்தச் சஞ்சீவியை நல்ல போஜனத்துடன் 15 நாள் சாப்பிட்டால் இணையில்லாத ஆனந்தத்தைத் தரும். மனிதர் தாம் இழந்துபோன தேக திடத்தைப் பழையபடி யடைவதற்கு இதைவிட வேறு மருந்தே கிடையாது. ஒருவர் 40-நாள் மருந்தை உட்கொள்ளும்பக்ஷத்தில் அவனுடைய தேகம் வஜ்ஜிரமேயாகும். இதற்கு யாதொரு பத்தியமும் கிடையாது.

20-நாள் மருந்து விலை ரூபா 1. 40-நாள் மருந்து விலை ரூபா 1-12-0.

## காசா

காசம், இருமல், க்ஷயம் முதலிய வியாதிகளுக்கு நல்ல சிறந்த ஔஷதமாகும். (இம் மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி) மலையாளத்தில் அநேகவிதமான வனமூலிகை உலோக வஸ்துக்களைக் கொண்டு முறைப்படி தயார் செய்தது. பத்தியமின்றி சாப்பிடலாம்.

80 நாள் 60 வேளை மருந்து விலை ரூபா 2-8-0.

## எலிக்ஸ்ரைன்

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், நசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும்.

20 நாள் மருந்து 40 வேளைக்கு உபயோகிக்கக்கூடியது. பூரண குணத்துக்குப் போதுமானது. விலை ரூபா 2-4-0.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்.

ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை.

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5பாகம். | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன்2பாகம் | 3 | 4 |
| மதனாம்பாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினாபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணாம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| ஆரூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| ஸகோதரவாஞ்சை ... | 0 | 7 |

---

| | | |
|---|---|---|
| [illegible] ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீ[illegible] பரமஹம்சருடைய சரித்திரமும் [illegible]தேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள [illegible] ... | 1 | 0 |
| [illegible] மபை ... | 1 | 0 |
| [illegible] விலாச விநோதம் | 0 | 10 |
| சீமாட்டி கார்த்தியாயினி ... | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| தயாளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயண வசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| மூப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 8 |
| பரசுராமன் ... | 0 | 8 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணாகரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செப்புப்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| நாலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனாமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீணாகானன் ஞானேந்திரி ... | 0 | 8 |
| மனோன்மணி கதை ... | 0 | 8 |
| கோமளவல்லி கதை ... | 0 | 8 |
| விகடவல்லி கதை ... | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை ... | 0 | 5 |

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

ஆனந்தபோதினி Regd. No. M. 1190.

# "பிரசண்ட விகடன்"

## மாதம் இருமுறை வெளிவரும்

## ஒரு ஹாஸ்யப் பத்திரிகை.



இதில் சிறப்பாக அரசியல், சமூக இயல், சமயவியல் சம்பந்தமான எல்லா விஷயங்களும் விலாப் புடைக்கச் சிரிக்கச் செய்யும் தோரணையில் தமாஷாகவும், வேடிக்கையாகவும், விநோதமாகவும், கேலியாகவும் வெளிவரும். ஏராளமான அபூர்வ அதி விசித்திரப் படங்கள் பத்திரிகையை அலங்கரித்து வரும். தேச சமூக விரோதிகளுக்கு உதைப் பந்து. இன்றே சந்தாதாரராகச் சேர முந்துங்கள்.

ஆண்டுச் சந்தா தபால் கூலி
உட்பட உள் நாடு ரூ. 2—0—0.
வெளி நாடு ரூ. 3—0—0.

தனிப்பிரதி விலை அணா 1½.

குறிப்பு:—ஏஜண்டுகளாக விரும்புவோர் நமது காரியாலயத்திற்கு எழுதி விவரம் தெரிந்துகொள்ளலாம்.

ரயில்வே ஸ்டேஷன்களிலுள்ள ஹிக்கின்பாதம் புஸ்தகசாலைகளிலும் "சுதேசமித்திரன்" புஸ்தக சாலைகளிலும், எல்லா ஊர்களிலுமுள்ள ஏஜண்டுகளிடமும் "பிரசண்ட விகடன்" 1½ அணாவுக்கு விற்கப்படும்.

ஏஜெண்டுகள் இல்லாத ஊருக்கு ஏஜண்டுகள் தேவை.

---

மானேஜர், "பிரசண்ட விகடன்" ஆபீஸ்.
நெ. 8, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

Edited, Printed & Published by N. Munisami Mudaliar,
At the "Ananda Bodhini" Press,
No. 8, Lawyer Chinnathambi Mudali Street, Madras.

அநேக நாஸைட்சியில் மெடல்கள் பெற்ற (ரிஜிஸ்டர்டு.)

# "சகுந்தலா" கூந்தல் வளரும்

## பரிமளத் தைலம்

ஆழாக்கு எண்ணெய் அடங்கிய




டின் 1-க்கு விலை அணா 12.

இத்தைலத்தின் பரிமளம் எவருக்கும் இன்பத்தை யளிக்கும். இது கூந்தலை சீக்கிரமாக வளரச் செய்யும். மூளையின் கொதிப்பைத் தணியச் செய்யும். கண்களுக்குக் குளிர்ச்சியைத் தரும். சிரசிலுள்ள பல வியாதிகளையும் நிவர்த்தி செய்யும். கண்களில் நீர்வடிதல், தலையில் புண், மயிர்வெடிப்பு, மயக்கம், தலைச்சுற்றல், தேக எரிச்சல், சொறி, சிரங்கு, கற்றாழை நாற்றம், மூளை வியாகுலம், ஞாபகமறதி இவைகளைப் போக்கடித்துத் தேக ஆரோக்கியத்தைத் தந்து வாசனையை உண்டாக்கும். இந்தத் தைலம், பல வனமூலிகைகளால் சாஸ்திரப்படி தயார் செய்யப்பட்டது. இதில் ஒரு டின் தைலம் வாங்கிப் பார்த்தால் இதன் அருமை விளங்கும்.




# கிருஷ்ண சஞ்சீவி

தலைநோய், பாரிச வாய்வு, சுளுக்கு, புண்கள், காயங்கள், வீக்கங்கள், கொப்பளங்கள், கட்டிகள், இருமல், மூச்சடைப்பு, தேள் கொட்டின விஷம் இவைகளைத் தீர்ப்பதில் இது முதன்மை பெற்றது. நோய்கண்ட இடத்தில் இந்த கிருஷ்ண சஞ்சீவியைத் தடவி நன்றாய் இரண்டு மூன்று நிமிஷங்கள் வரை தேய்த்தால், அது மாயமாய் ஓடிவிடும். இளங் குழந்தைகளுக்குக் காணும் சைத்திய ரோகங்களுக்கும் இதை உபயோகிக்கலாம். இதன் புட்டிகள் லக்ஷக் கணக்காகச் செலவழிந்து கொண்டு வருகின்றன. ஒவ்வொரு குடும்பத்திலும், பிரயாணிகள் கையிலும் இந்த கிருஷ்ண சஞ்சீவி இருந்தே தீரவேண்டும். இதன் விலை புட்டி 1-க்கு அணா 8. டஜன் 1-க்கு ரு. 5.

---

விலாசம்:- தனலட்சுமி கம்பெனி, தபால் பெட்டி நெ. 167, மதராஸ்